# தக்ஷிணாம்நாய பீடம்

# —சிருங்கேரியா? காஞ்சியா?







வெளியீடு :

அனைத்திந்திய

பகவத் பாத சிஷ்யர்கள் சபை, மதுரை.

ரூ. 1—30.

24-3

# முகவுரை.

தக்ஷிணாம்னாய பீடம், ச்ருங்கேரியா? காஞ்சியா? என்னும் புஸ்தகத்தை தொகுத்தவர்கள் மிகவும் உபகாரம் செய்தவர்கள் ஆகிறார்கள். மதராஸ் யூனிவர்ஸிடியில் இருக்கும் திரு தேவசேனாபதி என்பவர் 'காமக்கோட்டம் நாயன்மார்கள்' என்னும் தலைப்பில் ஓர் புஸ்தகம் வெளியிட்டிருக்கிறார். புஸ்தகத்தின் பெயருக்கு ஸம்பந்தமில்லாமல் ஸ்ரீ சங்கரரைப் பற்றிய வரலாறுகள் திணிக்கப்பட்டிருக்கின்றன. அதிலும் ஸ்ரீ காஞ்சியில் ஸ்ரீ வரதராஜபெருமாள் கோவிலில் ஓர் தூணிலிருக்கும் ஓர் பிம்பத்தை ஸ்ரீ சங்கரருடையது என்று மிக துணிவோடு எழுதியிருக்கிறார். ஏற்கனவே தொல், பொருள், ஆராய்ச்சி நிபுணர்கள் பலர் அது ஸ்ரீ சங்கரர் பிம்பம் அல்ல என்று கூறிய கருத்தையும் பொருட்படுத்தாது துணிந்து, தவறுகளை எழுதியிருக்கிறார். "காஞ்சியில் தேவீ காமாட்சி" என்னும் புத்தகத்தில் தகுந்த விளக்கத்துடன் K. R. வெங்கிட்டராமன் Retd. Director of Public Instrictions, என்பவர் எழுதியுள்ளதைக் காண்க. 1971 வரை சில ப்ரசாரகர்கள், பூரி, ச்ருங்கேரி, துவாரகை, பத்ரி, காஞ்சி ஆக 5 பீடங்களைப்பற்றி கூறி வந்தார்கள். அதை மறுக்கும் வகையில் Dr. R. வீழிநாதன், M.A,. Ph. D., என்பவர் 1975 ஜனவரி மாத 'மாலா' பத்திரிகை இதழில், பூரி, காஞ்சி, துவாரகை, பத்ரி என்று நான்கு பீடங்களை ஸ்ரீ சங்கரர் நிறுவியதாக எழுதி இருக்கிறார். இவ்வித குழப்பங்களுக்கும், பொய் பிரச்சாரங்களுக்கும், சரியான மறுப்பாக இப்புத்தகம் அமைந்திருக்கிறது. படித்து, உண்மையை அறிய இப்புத்தகம் உதவும் என்பது எனது துணிவு.

**T. *ஸ்ரீநிவாஸராகவன்,*** பி.ஏ., பி.எல்.,
அட்வகேட், & தலைவர்
மதுரை மாவட்ட ஐக்கிய
வைஷ்ணவ ஸபை, மதுரை.

மதுரை
13-4-77

ஓம் ஸ்ரீ ஸத்குரு ஸ்வாமினே நம: ||

ஸத்யம் வத || ஸத்யான்ன ப்ரமதிதவ்யம் ||
ஸத்ய மேவ ஜயதே, நான்ருதம் || வேதம்

1 காம! ஜாநுமி தே மூலம் ஸங்கல்பாத் கில ஜாயஸே |
ந த்வாம் ஸங்கல்பயிஷ்யாமி. ஸமூலோ ந பவிஷ்யஸி ||

2 நாஸ்தி வித்யா ஸமம் சக்ஷு: நாஸ்தி ஸத்ய ஸமம் தப: |
நாஸ்தி ராக ஸமம் துக்கம் நாஸ்தி த்யாக ஸமம் ஸுகம் ||

3 நாஸ்தி ஸத்யாத் பரோ தர்ம: நான்ருதாத் பாதகம் மஹத் |
ஸ்திதிர்ஹி ஸத்யம் தர்மஸ்ய தஸ்மாத் ஸத்யம் ந லோபயேத் ||

4 அச்வ மேத ஸஹஸ்ரம்ச ஸத்யம் ச துலயா த்ருதம் |
அச்வ மேத ஸஹஸ்ராத்தி ஸத்யமேவ விசிஷ்ய தே ||

5 துல்ய நிந்தா ஸ்துதிர் மௌனீ ஸமலோஷ்டாச்ம காஞ்சன; |
ஸம: சத்ரௌ ச மித்ரேச நிர்வாண மதிகச்சதி ||

மஹாபாரதம்.



## I ஆதிசங்கரரும் ஆம்னாய பீடங்களும்

உலக சரித்திரத்திலேயே மிகுந்த அறிவாளி ஆதி சங்கரர். ஒப்பு யர்வற்ற ஞானி ஆதி சங்கரர். விவேக வைராக்யங்களின் மிகுதியால் தன் எட்டாவது வயதிலேயே ஸன்யாசம் பெற்றவர் ஆதி சங்கரர். வேதத்திற்குப் புறம்பான மதவாதிகளை வென்றவர் ஆதி சங்கரர். அக்ஞானத்தால் மறைக்கப்பட்ட வைதீக ஞான ஒளியை விஸ்தார மான நமது பாரத தேசத்தில் ஸ்வல்பகாலத்துக்குள் பரவச்செய்தவர் ஆதி சங்கரர். மிகக் குறுகிய ஆயுள் காலமான 32 வயது அளவுக்குள் தேசமெங்கும் ஸஞ்சாரம் செய்து பரந்த இந்த பாரத தேசத்தில் மங்கி யிருந்த வைதீக மதத்திற்குப் புதிய ஒளியைக் கொடுத்தார். தனக்குப் பிற்காலத்திலும் வைதீக மதம் தழைத்திருக்கச் செய்வதற்காக பாரத தேசத்தில் நான்குதிக்குகளிலும் நான்கு ஆம்னாயபீடங்களைபிரதிஷ்டை செய்தார். ஆம்னாயம் என்றால் வேதம். அவை நான்கு தான்! திக்கு கள் நான்கு. பிரதான சிஷ்யர்கள் நான்கு. ரிக்வேதம் — ரிக்வேத மஹா வாக்யம் எனும் ஆம்நாயத்தைக் கொண்டு கிழக்கு திக்குக்கு ஜகன்னாத் பூரியில் கோவர்த்தன பீடத்தை ஸ்தாபித்து, தன் சிஷ்ய ரான ஹஸ்தாமலகரை அங்கு ஜகத்குருவாக நியமித்தார். யஜுர் வேதம்-யஜுர்வேத மஹாவாக்யம் என்னும்ஆம்நாயத்தைக்கொண்டு தென் திசைக்கு ரிச்ய ஸ்ருங்கபுரம் என்னும் சிருங்கேரியில் சாரதா பீடத்தை ஸ்தாபித்து தன் சிஷ்யரான சுரேஸ்வரரை அங்கு ஜகத்குரு வாக நியமித்தார். ஸாமவேதம் — ஸாமவேத மஹாவாக்யம் என்னும் ஆம்நாயத்தைக் கொண்டு மேற்கு திக்கில் துவாரகையில் காளிகா பீடத்தை ஸ்தாபித்து தன் சிஷ்யரான பத்மபாதரை ஜகத்குருவாக நியமித்தார். அதர்வவேதம்-அதர்வவேதமஹாவாக்யம் என்னும் ஆம் நாயத்தைக் கொண்டு வடக்கு திக்கில் பதரியில் ஜ்யோதிர் மடத்தை ஸ்தாபித்து தன்சிஷ்யரான தோடகரை (ஆனந்தகிரியை) அங்குஜகத் குருவாகநியமித்தார். இந்தநான்கு ஆம்நாயபீடங்களில் பரம்பரையாக வருகிறவர்களுக்கு மட்டிலும், ஜகத்குரு என்ற பிருது உண்டு என்பது இங்கு குறிப்பிடத்தக்கது. இவ்விதம் ஸ்தாபிக்கப்பட்டதற்கு சரித்ர பிரமாணத்துடன் மூல ஆதாரமாக விளங்குவது மடாம்னாய ஸ்தோத் ரம் என்பதாகும். இந்த ஸ்தோத்ரம் பழமையான ஏட்டுப்பிரதி ரூப மாக பூரி, துவாரகை, காசி, சிருங்கேரி முதலிய முக்ய ஸ்தானங்களில் இருக்கின்றன. சமீப காலத்தில் அச்சுப்பிரதிகளாகவும் வந்திருக் கின்றன இந்த ஸ்தோத்ரத்தின் நகல் ஸம்ஸ்கிருதத்திலேயே அனு பந்தம் 1ல் கீழே காட்டப்பட்டுள்ளது. இதன் பிரகாரமாகவே மேலே காட்டப்பட்ட நான்கு மடங்களும் ஆதிசங்கரரிட்ட ஸம்பிரதாயத்தைத் தொடர்ந்து அனுசரித்துக்கொண்டு பாரத தேசத்தில் வைதீக மதத் தை வளர்த்து வருகின்றன. பாட்னா ஹைகோர்ட்டின் 19-11—1936ம் தேதிய தீர்ப்பு ஒன்றில் இந்த மடாம்னாயத்தைப்பற்றிக் கூறியிருப்பது இங்கு குறிப்பிடத்தக்கது. — "The scriptures which govern the fundamental doctrines and origion of FOUR MUTTS are known

1
2
3
4

as Mathamnaya, but it is said that this document is really of the eighth century and not of an early date, which is attributed to it by tradition. The Mathamnaya is accepted as authoritative by Hindus". இந்தத் தீர்ப்பில் நான்கு ஆம்னுய பீடங்களைக் குறிப்பிட்ட மடாம்நாயம்தான் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது, "ஐந்து" ஆம்நாயம் என்று குறிப்பிட்டு வெளியான கும்பகோணம் மடத்தாரின் "மடாம்நாய சேது" ஒப்புக்கொள்ளப்படவில்லையென்பது தீர்ப்பின் கீழ்க்காட்டிய வசனங்களால் கிடைக்கிறது.

"The founder Adi Sankaracharya divided India into four jurisdictions with a mutt at the head of each ..................) Eastern India was placed under Govardhan Mutt — the object of the present dispute — and Southern India under the **Sringeri Mutt in Mysore**. The head of each mutt is known by the title JAGADGURU SANKARACHARYA and his religious authority is widely if not universally accepted". இந்த தீர்ப்பில் காண்பிக்கப்பட்ட "மடாம்நாய ஏடு" பூரி மடத்தாரின் கைவசத்திலிருந்து கோர்ட்டில் தாக்கல் செய்யப்பட்டது எனத் தெரிந்து கொள்ளலாம். இதே பிரகாரமாக பம்பாய் ஹைகோர்டிலும் தீர்ப்பளித்திருப்பது கீழே குறிப்பிடப்படுகிறது. 33 - Bombay -278 ஜட்ஜ்மெண்டில் Chief Justice Scott அவர்களின் தீர்ப்பில்:-

'It is not disputed that the religious reformer Shankar about the eighth century A.D., established four mutts or monasteries for Sanyasis and ascetics in the north, south, east and west of India namely the Jyotir Mutt in Badrinath in the Himalayas, the Sringeri Mutt in South India, the Sharada Mutt at Dwaraka in Gujarat and the Govardhana Mutt at Puri in Cuttack.

"The name Sankaracharya which means the preceptor Shankar properly belongs to the reformer Shankar alone but after his death some of the followers appear to have adopted the name as title, probably as Mr. Ghose in his work on Hindu Law (P. 787) suggests, because they thought themselves incarnations of the reformer.

"The Doctrines of Sankara having obtained a permanent footing in India, there naturally arose in the course of centuries, other preachers besides the Mohants of the original Mutts who claimed to be incarnations of the founder and established new Mutts in his honour."

இந்த ரீதியில்தான் சிருங்கேரியின் கிளையாக தஞ்சாவூரில் தோன்றிய சிக்குடையார் மடம், கும்பகோணம் மடமாக ஆகி, தற்சமயம் காஞ்சி காமகோடி பீடமாக அந்தஸ்தை உயர்த்திக் கொண்டது.

இது தவிர, ''மடாம்னய சேது'' என்னும் பிராசீன கிரந்தமும் இருந்து வருகிறது. இதுவும் மிகப்பழமையான ஏட்டு ரூபத்திலிருந்து வருகிறது. இதில் திருஷ்டி கோசரமான (நம் கண்ணுக்குப்புலப்படும்) ஆம்னய பீடங்கள் நான்கும் ஞான கோசரமான (புலனாகாத) மடங்கள் மூன்றும் வர்ணிக்கப்பட்டுள்ளது. ஞான கோசரமான மடங்கள் நமக்கு இங்கு ப்ரக்ருதமில்லாததால், திருஷ்டி கோசரமான ஆம்னய பீடங்கள் நான்கை மட்டிலும் எடுத்துக் காட்டும் சுலோகங்களை அனுபந்தம் 2ல் கீழே காட்டப்பட்டுள்ளது. அனுபந்தம் 1க்கும் அனுபந்தம் 2க்கும் ஸ்வல்ப வித்யாசம் காணப்பட்டாலும் பெரும்பாலும் ஒற்றுமையிருப்பதை கவனிக்கலாம். தக்ஷிண தேசத்திலுள்ள நம் சம்பந்தப்பட்ட மட்டில் இரண்டு அனுபந்தங்களிலுமுள்ள வித்யாசங்களை மட்டும் கவனிப்போம். முதல் அனுபந்தத்தில் ''சாரதா மடம்'' என்று சிருங்கேரியை வர்ணிக்கிறது. இரண்டாவது அநுபந்தத்தில் ''சிருங்கேரி மடம்'' என்றே வர்ணிக்கிறது. முதல் அனுபந்தத்தில் முதல் குரு ''ஸுரேஸ்வரர்'' என்று குறிப்பிட்டுள்ளது. இரண்டாவது அநுபந்தத்தில் ''பிருத்வீதரர்'' முதல் குரு எனக் குறிப்பிட்டுள்ளது. அனுபந்தம் 1ல் க்ஷேத்ரம் ''ராமக்ஷேத்ரம்'' எனக் குறிப்பிட்டிருக்கிறது இரண்டாவது அநுபந்தத்தில் ''ராமேஸ்வரம்'' க்ஷேத்ரம் என்று மிகத் தெளிவாகக் காட்டப்பட்டுள்ளது. சக்தி ''சாரதா'' என முதல் அநுபந்தத்தில் கூறப்பட்டிருக்கிறது. இரண்டாவது அநுபந்தத்தில் ''காமாக்ஷி'' தேவதை எனக்குறிப்பிட்டிருக்கிறது. இதைக்கவனித்தால் - நன்கு ஆராய்ந்து பார்த்தால் — காமாக்ஷியிருக்கும் ஸ்தானமான காஞ்சீபுரமும் சிருங்கேரியின் ஆதீனத்திற்குட்பட்டது என்று தெளிவாய்த்தெரிய வருகிறது. இக்காரணத்தால் தான் காஞ்சீபுரத்தில் சிருங்கேரியைச் சார்ந்த மடக்கட்டிடம் பல வருஷங்களாக (காஞ்சீபுரத்துக்கு கும்பகோணம் மடத்தார் முதன் முதலாக வந்த கி. பி. 1839-ம் வருஷத்துக்கும் முன்னாலேயே) விளங்கி வருகிறது.

அடையாறு லைப்ரரியிலிருந்த பல ஏட்டுப் பிரதிகளை—முன் அச்சில் வராததை —1937ம் வருஷத்தில் முதன்முதலாக ''Unpublished Upanishads'' என்னும் புஸ்தக ரூபமாக அச்சுப்போட்டார்கள். அந்த புஸ்தகத்தில் ஆதிசங்கரரால் இயற்றப்பட்ட ''மடாம்நாய உபநிஷத்'' என்னும் பெயர் வாய்ந்த உபநிஷத்தும் வெளிவந்துள்ளது. இதை 3 வது அநுபந்தமாக கீழே காட்டியுள்ளது. அதிலும் நான்கு மடங்கள் மட்டிலும் ஆதிசங்கரரால் பிரதிஷ்டை அடைந்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இதிலும் தெற்கு திக்குக்கு சிருங்கேரி மடமும், இதைச்

சார்ந்ததாக "ராமேஸ்வர க்ஷேத்ரமும், காமாக்ஷி தேவியும்," காட்டப் பட்டிருப்பதை நன்கு கவனிக்கலாம். இந்த மூன்ருவது அநுபந்தத்தி லும் அந்தந்த பீடத்துக்குரிய வேதமும் மஹா வாக்யமும் ஒரே மாதிரி யாகக் காட்டியிருப்பதை கவனிக்கலாம். இதிலிருந்து, காஞ்சியும், ராமேஸ்வரமும் அடங்கிய தமிழ்நாடு முழுவதுக்குமே, சிருங்கேரி மடத்தில் வீற்றிருக்கும் மஹனீயர்களே ஜகத்குருக்கள் என திட்ட வட்டமாக ஸித்திக்கிறது. முதல் குரு "ஸுரேஸ்வரரா" அல்லது ப்ருதிவீதரரா என்பது குறித்து நாம் இன்றைக்கு சர்ச்சை செய்ய வேண்டியது அவஸ்யமில்லே. ஆனுலும் தொன்று தொட்டு சிருங்கேரி யிலேயே ஸுரேஸ்வரரின் ஸித்தி ஸ்தலத்தில் ஆலயமிருந்து வருவ தன் மூலம் (A Monumental proof) எனும் உயரிய பிரமாணத்தால் ஸுரேஸ்வரரே சிருங்கேரியில் முதல் குரு என்பது மறுக்க முடியாத வாறு ஸித்திக்கிறது: மற்றும் தமிழ்நாடு உட்பட (காஞ்சியும், ராமேஸ் வரமும் உட்பட) தென்னுட்டுக்கு ஜகத்குரு சிருங்கேரியில் வீற்றிருக் கும் தக்ஷிணும்நாய பீடாதிபதி அவர்களே என்பது மறுக்க முடியாத உண்மையாகும்.

## II சிருங்கேரி பீடம்

இனிமேல் சில இதிஹாச புராணங்களே கவனிப்போம். சிருங்கேரி என்பது ரிஸ்யஸ்ருங்கபுரம் என்ற நீண்ட பெயரின் சுருக்கமான பெய ராக தற்சமயம் கூறப்படுகிறது. இவ்விடத்தில்தான் ராமாயணப் பிர சித்தி பெற்ற விபண்டக மஹரிஷியும், ரிஸ்யஸ்ருங்க மஹரிஷியும் தபஸ் செய்தார்கள். அநுபந்தம் 1 ல் காட்டிய விபரப்படி விபண்டக மஹரிஷி பூஜை செய்த "மலஹானிகரேஸ்வரர்" ஆலயம் சிருங்கேரி யிலேயே ஓர் மலேயின் மீது உள்ளது. இதை பரணீதரனும் பார்த்து விட்டுத் தனது "புண்ணிய பாரதம்" என்னும் புஸ்தகத்தில் விவரித் திருக்கிருர் சிருங்கேரி மிகவும் சாந்தமான இடமென்பதற்கு ராமாயண மே சான்று. ரிஸ்யஸ்ருங்கர் அங்க தேசத்திலிருந்து வந்த பெண்மணி களேப் பாரத்து அவர்கள் ஆணு பெண்ணு என்ற வித்யாசம் கூடத் தெரியாமல் பெண்களேயும் ரிஷிகள் என்றே கருதினுர். இந்த சாந்த மான இடத்தில் கல்மஷமேயில்லாத மனதுடன் தவம் செய்த பெரு மையால் ரிஸ்யஸ்ருங்கர் அங்கதேசத்தில் நுழைந்ததும், பல வருஷங் ளாக மழையைக் காணுது தவித்துக் கொண்டிருந்த ஜனங்களுக்கு ஆச்சர்யத்தையும், ஸந்தோஷத்தையும் தேசத்தின் சுபிக்ஷத்தையும் உண்டுபண்ணும் விதம் மழை கொட்டியது. மேலும் புத்ரனே விரும் பிய தசரத சக்ரவர்த்தி ரிஸ்யஸ்ருங்கரின் உபதேசப்படி, அவரது சகா யத்தைக் கொண்டு புத்ர காமேஷ்டி யாகத்தைச் செய்து யாக குண்டத்திலிருந்து தோன்றிய ஓர் திவ்ய புருஷனுல், பாயஸம் கொண்டுவரப்பட்டு பாயஸத்தைப் பருகியதன் காரண

மாக தசரதரின் பத்னிகள், பகவானையே அவதார புத்ரர்களாக அடைந்தனர். இது ராமாயணம் எடுத்துக் காட்டும் திவ்ய சரித்ரம். இன்றும் சித்விலாஸீயத்தைப் படித்தால் 20—21—22—23 அத்யாயங்களில் சிருங்கேரியின் தூய்மையும், பெருமையும் மிகஅத்புதமாக விளங்குகிறது. பலபேர்கள் தவமிருந்த இடமென்றும் விரோத மனப்பான்மையுடைய பிராணிகள் ஒன்றுக்கொன்று உதவி புரிந்து கொள்கின்றனவென்றும் மேற்படி சங்கர விஜயம் கூறுகிறது. இந்த அத்யாயங்களை யாவரும் படிக்க வேண்டியது அவஸ்யம். மேலும் ஆதிசங்கரர் இந்த ஸ்தலத்துக்கு வந்தபோது கொடுமையான மத்யான வெய்யிலில் ஓர் தவளை பிரசவ வேதனையால் ஆத்யாத்மிக துக்கத்தை அனுபவித்துக்கொண்டும், சூரியவெப்பத்தால் ஆதிதைவிகமான துக்கத்தை, மற்றொருபக்கம் அனுபவித்துக்கொண்டும், பிரஸவித்துக் கொண்டிருக்கும் தருவாயில் தவளைக்கு இயற்கை விரோதியான ஓர் ஸர்ப்பம் தவளைக்கு உதவிபுரிய மனமுவந்து சூரிய வெப்பம் தவளையின் மேல் படாமல் படமெடுத்து நிழல் தந்து கொண்டிருந்ததைப் பார்த்தார். இந்த இயற்கைக்கு மாறான காக்ஷியைப் பார்த்த சங்கரர் இந்த ஸ்தலம்தான் சாரதாம்பாளை பிரதிஷ்டை செய்வதற்கு உகந்த ஸ்தலமென்று தீர்மானித்து, ஸ்ரீ சக்ரத்தை வரைந்து ஸ்ரீ சாரதாம்பாளை பிரதிஷ்டை செய்தார். மேலும் வியாஸர் வரமாகக் கொடுத்த 16 வருஷகாலத்தில் 12 வருஷகாலம் சிருங்கேரியிலேயே—பரம சாந்த ஸ்தலமாகக்கருதி, வாஸம் செய்து, சிஷ்யர்களுக்கு பாஷ்ய பாடம் சொல்லிக்கொடுத்து, தக்ஷிண திக்குக்கான பீடத்தையும் பிரதிஷ்டை செய்தார். இவ்வளவு பெருமை வாய்ந்தது நம் தக்ஷிண தேசத்தவர்களின் ஜகத்குரு வாஸம் செய்யும் க்ஷேத்ரமான சிருங்கேரி! புண்யசாலிகள்தான் இந்த க்ஷேத்ரத்தை தர்சனம் செய்ய முடியும். இங்கு வரவேண்டுமென்று முயற்சிபண்ணியும்கூட தர்சனம் செய்ய வர முடியாவிட்டால், அதற்கு அவர்களிடமுள்ள அஸத்யமும் பாபமும் தான் பிரதிபந்தகம் என்பதைச் சிலர் பிரத்யக்ஷமாகவே அனுபவித்திருக்கிறார்கள். ஆகவே புண்யசாலிகள் யாவரும் சிருங்கேரியையும், அதிலுள்ள சிறப்பு வாய்ந்த ஆலயங்களையும் இயற்கை அழகையும் பார்க்கவேண்டியது மிக அவஸ்யம். ஆத்யாத்மிக, ஆதி தைவிக, ஆதி பௌதிக தாபங்களால் வருந்துகிறவர்கள் குறைந்தபக்ஷம் ஒன்று அல்லது இரண்டு வாரங்களாவது சிருங்கேரியில் தங்கி, தீர்த்த ஸ்நாநம், மூர்த்தி தர்சனம், க்ஷேத்ர வாஸங்களைச்செய்தால் சமஸ்த தாபங்களும் நீங்கிவிடுமென்பதை அனுபவத்தில் தெரிந்து கொள்ளலாம். ஸ்ரீ ராமாவதாரத்துக்கு காரண பூதரான ரிஸ்யஸ்ருங்க மஹர்ஷியின் வாசஸ்தலத்தைப்பார்க்கும் பாக்யம் யாருக்குஉள்ளதோ, அவர்களுக்கு ஸ்ரீ ராமனுடைய அனுக்ரஹம், ரிஸ்யஸ்ருங்கரின் அனுக்ரஹம், ஜகத்குருவின் கடாக்ஷம் இவைகள் ஸித்தித்து இகபர சுகங்களும், ஸ்ரீ சாரதாம்பிகையின் பிரசாதத்தால் ஞானமும் ஏற்படும் என்பது நிச்சயம்

அதிலும் நவராத்ரி காலத்தில் சிருங்கேரி ஸ்ரீ சாரதாம்பாளை தரிசிப்பது போன்ற பாக்யம் கிடைத்தல் அரிது. மணித்வீபத்தில் ஸ்ரீ பராசக்தியை பார்ப்பது போன்ற காக்ஷியை சிருங்கேரியில் பார்க்கலாம. நேரில் பார்த்து அனுபவிக்க வேண்டிய விஷயத்தை இங்கு விஸ்தரிக்கவில்லை.

## III ஆதிசங்கரருக்கு காஞ்சியின் ஸம்பந்தம்

இனிமேல் ஆதிசங்கரருக்கும், காஞ்சிக்கும் உள்ள சம்பந்தத்தை கவனிப்போம். இப்பொழுது பழக்கத்திலுள்ள சங்கர விஜயங்களுள் மாதவீய சங்கர விஜயம்தான் மிகவும் ப்ராசீனமானது. பதினான்காம் நூற்றுண்டில் இருந்த வித்யாரண்யரால் இயற்றப்பட்டது என நம்பிக்-கையுடன் கூறலாம், ஆஸேது ஹிமாசலம் இந்த சங்கரவிஜயத்தையே பண்டிதர்கள்உட்பட யாவருமே கையாண்டுவருகிருர்கள். சித்விலாஸீய சங்கர விஜயமும், ப்ராசீனக்ரந்தம்தான். ஆனுலும், இது பாராயணத்துக்கு உபயோகப்பட்டாலும், சங்கர விஜய சரித்ரம் சொல்லக்கூடிய பண்டிதர்கள் இதைக் கையாளுவதாகத் தெரியவில்லை. மாதவீய சங்கர விஜயத்திலுள்ள ஸ்லோகங்களையே கூறி கதை பண்ணுகிருர்கள். பல பண்டிதர்களை நான் இவ்விதம் கேட்டதுண்டு.—"வியாஸாசலீயம் பார்த்திருக்கிறீர்களா? ஆனந்தகிரி சங்கர விஜயம் பார்த்திருக்கிறீர்களா? சிவரஹஸ்யம் பார்த்திருக்கிறீர்களா? மார்க்கண்டேய ஸம்ஹிதை பார்த்ததுண்டா? சங்கராப்யுதயம் பார்த்ததுணடா? பதஞ்சலி சரிதம் பார்த்திருக்கிறீர்களா? இப்படியெல்லாம் கேட்கப்படும் கேள்விகளுக்கு பண்டிதர்கள் கூறும் பதில் என்ன? மாதவீய சங்கர விஜயம் தான் பார்த்திருக்கிருேம் என்று கூறுகிருர்கள். சரி. ஆதிசங்கரர் ஹிமாசலத்தில் மறைந்ததாக அல்லவா இந்த சங்கரவிஜயம் கூறுகிறது என்ருல், இதற்கு சோழ தேசத்துப் பண்டிதர்கள் மட்டும் மௌனம் சாதிக்கிருர்கள். ஆக ஆதிசங்கரர் மறைந்த இடம் "ஹிமயத்தில்" என்ற விஷயம் மட்டும் மாற்றி அமைக்கப்பட்டு சிலரால் கூறப்படுகிறது. ஒரு புஸ்தகத்தை ப்ரமாணமாக வைத்து சரித்ரம் கூறுங்கால் ஆதிமுதல் அந்தம் வரை அதையே அனுசரித்து சரித்ரம் கூறப்பட வேண்டும். ஓர் பாகத்தை புஸ்தகத்திலுள்ளபடியும், மற்ருேர் பாகத்தை புஸ்தகத்தில் இல்லாதவிதமாகவும் கூறுவது சரியல்ல.

மாதவீய சங்கர விஜயத்தின்படி ஆதி சங்கரர் 12 வருஷங்கள் சிருங்கேரியில் வாஸம் முடிந்தபின் விஜயயாத்ரையாகப் புறப்படுகிருர். ராமேஸ்வரம், மதுரை சோழ தேசம் இவ்வழியாகக் காஞ்சிபுரத்துக்கு வந்து ஒரு மாத காலம் மட்டும் தங்குகிருர். இவ்விடத்தில் ஆலயங்களில் பூஜைகளை வைதீக முறைப்படி செய்யும்படி சீர்திருத்தம்: ஸ்ரீ சக்ர ப்ரதிஷ்டை இவைகளைச் செய்துவிட்டு ஒரு மாத காலத்துக்குப் பின் வடக்கே பல இடங்களைப் பார்த்துக் கொண்டு காஷ்மீரத்தில் ஸர்

வக்ஞபீடமேறி கேதாரத்தில்மறைந்தார் எனவும்,ஸ்வஸ்தானமான கைலாஸம் சென்ருர் எனவும், இருக்கிறது. இதைப் போலவே இதர சங்கர விஜயங்கள் கூறுவதுடன், சிவரஹஸ்யத்தில்கூட இவ்விதம் கூறுவதாக ''ஸத்யான்வேஷணம்'' என்ற புஸ்தகத்தில் விவரித்துக் காட்டப் பட்டுள்ளது. ஆக காஞ்சியில் ஆதிசங்கரர் செய்த காரியங்கள் மிக ஸ்வல்ப அளவுதான். நிற்க, சிவன் பேரிலும், அம்பாள் பேரிலும், விஷ்ணு பேரிலும் பல ஸ்தோத்ரங்களை ஆதிசங்கரர் இயற்றியிருக்கிருர் பிரமராம்பிகை, மதுரை மீனுக்ஷி, அன்னபூர்ணு, சாரதா முதலிய ஸ்தோத்ரங்களை இயற்றிய சங்கரர் (காஞ்சியில் ஸ்வஸ்தானமாக ஏற்படுத்திக் கொண்டார் என்ற ஒரு சாராரின் கூற்றுக்கு இணங்க) ஏகாம்ரநாதரைக் குறிப்பிட்டாவது, காமாக்ஷியம்மனைப் பற்றியாவது ஏதேனும் ஸ்தோத்ரம் செய்திருக்கிருராஎன முயற்சிசெய்து சங்கரகிரந்தாவளியில் தேடிப் பார்த்தேன். ஒரு ஸ்லோகம் கூட அகப்படவில்லை. மடாம்ணய சேதுவிலும், மடாம்ணய உபநிஷத்திலும் சிருங்கேரி பீடத்தின் சக்தியாக "காமாக்ஷி'' என்று ஆதிசங்கரர் குறிப்பிட்டிருக்கிருர். லலிதா த்ரிசதீ ஸ்தோத்ரத்தில் உபயோகப்படுத்தப்பட்ட 'காமகோடி நிலயா'' என்ற பதத்தை எடுத்துக் கொண்டு வியாக்யானம் செய்திருக்கிருர். இதைத் தவிர "காமகோடி'' என்ருவது ''காமகோடி பீடம்'' என்ருவது ஆசார்யாள் தன்வாயால் சப்தங்களை ப்ரயோகிக்கவுமில்லை. காமாக்ஷியம்மன் பேரில், தன் வாயால் ஸ்தோத்ரம் செய்யவுமில்லை. (காமாக்ஷியம்மன் பேரில் ஆசார்யாள் ஸ்தோத்ரம் செய்துள்ளதுபோல கல்பனை செய்து இனிமேல் ஒரு ஸ்தோத்ரம் வெளியிடமாட்டார்களென நம்பப் படுகிறது). இதற்கு மாருக சிருங்கேரி சாரதாம்பாளைக் குறித்து ஆதி சங்கரர் ஸ்தோத்ரம் செய்துள்ளது யாவருக்கும் தெரியும். இதைக் கொண்டே ஆதிசங்கரருக்கும் காஞ்சிக்கும் எந்த அளவுக்கு சம்பந்தம் என அறிந்து கொள்ளலாம். ஒரு சிலர் பிம்பங்களையும், கல்வெட்டுகளையும் காண்பித்து இவைகள் மூலம் ஆதிசங்கரர் காஞ்சியில் மடம் ஏற்படுத்தினர், இங்குதான் ''ஸித்தி'' அடைந்தார் என ஜோடனை செய்கின்றனர். அவர்களை மதுரை மீனுக்ஷி கோவிலுக்கு அழைத்துச் சென்று, கோவிலில் உள்ள பஞ்சபாண்டவர்களின் பிம்பங்களையும், வாலி, சுக்ரீவன், ஹனுமார் பிம்பங்களையும், கோபுரங்களில் உள்ள சமஸ்த பிம்பங்களையும், தூணிலேயே செதுக்கப்பட்ட தவநிலையிலுள்ள ஸன்யாசிகள், ஸித்தர்கள் யோகிகள் இப்பேர்பட்ட பிம்பங்களையும் காண்பித்தால், மதுரைக்கும் ராமாயணத்துக்கும், மதுரைக்கும் மஹாபாரதத்துக்கும், மதுரைக்கும் பல புராணங்களுக்கும், ஏன்? ஆதிசங்கரருக்கும்கூட இணைப்பு ஏற்படுத்தி ''ஸ்யாமளா பீடாதிபதி'' என ஒரு சன்யாசிக்கு (ஆதி சங்கரருடைய பரம்பரையில் வந்ததாகக்) கல்பித்து, மிகுந்த பெருமையை ஏற்படுத்தி விடலாம். அந்த சன்யாசிக்கு செல்வாக்கும் பிரசார பலமும் இருந்தால் போதும். இது

போலத்தான் "காஞ்சி காமகோடி பீடாதிபதி – ஜகத்குரு" என்று இன்று வழங்குவதெல்லாம் என்று கூறினல் மிகையாகாது காஞ்சியிலுள்ள கல்வெட்டு முதலானவைகளின் உண்மை வரலாறுகளை ஆதாரங்களுடன் 1973ம் ஆண்டில் வெளியான. ஸ்ரீ K R. வெங்கட்ராமய்யரவர்களின் "Devi Kamakshi in Kanchi" என்ற புஸ்தகத்தின் மூலம் நன்கு அறிந்து கொள்ளலாம். இப்புத்தகம் ஓர் சாராரின் கல்வெட்டு ஜோடனைகளுக்கு மறுப்பாக ஆகிறது.

## IV நூதன சங்கர விஜயங்களும் இதர கல்பனைகளும்

ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்தில் அஹிமஹிராவணன் கதை கூறப்படவில்லை. சதகண்ட ராவணன், ஸஹஸ்ரகண்ட ராவணன் கதை கூறப்படவில்லை. உத்தர காண்டத்தில் ஸ்ரீ ராமருடைய அஸ்வ மேதக் குதிரையை வால்மீகி ஆஸ்ரமத்தில் வளரும் குசலவாள் கட்டியது போலவும், குதிரையை மீட்க வந்த ராமலக்ஷ்மண பரத சத்ருக்னர்களை குசலவாள் வென்றனர் என்றும் நாடோடிக் கதை கூறப்படவில்லை. இக்கதைகள் மிக ஸ்வாரஸ்யமாகவும், கவர்ச்சிகரமாகவும் இருக்கலாம். ஆனல் கேட்பதற்குப் பிரியமாயிருப்பதாக மதித்து, உண்மைக்குப் புறம்பான ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்தில் கூறப்படாத கதைகளை சிலர் புஸ்தக ரூபமாகவும், சினிமாமூலமாகவும் படித்தும் கேட்டும் உண்மையான கதை யென்று நம்பிவிடுகிருர்கள். இதே போல சில பண்டிதர்கள்கூட மாதவீய சங்கர விஜயத்தை கூறும்போது அடிமுதல் நுனி வரை அதிலுள்ளபடியே சொல்வதினின்றும் மாறி, "காஞ்சியில் ஓர் மடம் ஏற்படுத்தினர் — காஞ்சியில் ஸித்தியடைந்தார்" என்று கூறும்போது தமிழ் நாட்டு ஜனங்களுக்கு பிரியமாயிருக்குமெனக் கருதி, இந்தக் கதையையும் ஜோடனை செய்து கூறிவிடுகிருர்கள். இவ்விதம் சிறுவர்களைக்கூட ஏமாற்றும் விதத்தில் "ஆதிசங்கரரின் சரித்திரச் சுருக்கம்" என்றுபல புஸ்தகங்கள் வெளிவந்துள்ளது. சிறுவர்களின் பாடபுஸ்தகங்களில்கூட இவ்விதம் கல்பனை தோன்ற ஆரமபித்துவிட்டது. ஆனல் மாதவீய சங்கர விஜயத்தில் இவ்விதம்கிடையாது. சென்ற நூற்ருண்டில் ஓர் நூதன சங்கரவிஜயம் ஸம்ஸ்க்ருதத்திலேயே வெளியானது இதில் கூறியிருப்பதாவது ஆதிசங்கரர் சிதம்பரத்தில் அவதரித்தாராம்! யாருக்குப் புத்ரனுக என்ற கேள்விக்கு பதில் கூற லஜ்ஜைப்பட்டுக் கொண்டு இங்கு கூருமல் விடப்பட்டது. சிதம்பரத்திலேயே கோவிந்தபகவத் பாதரிடம் உபதேசம் பெற்ருராம்! வேத வியாஸரோடு வாதம்புரியும் போது அவரைக் கன்னத்தில் அடித்தாராம்! அவரை கல்தா பிடித்துத் தள்ளிவிடும்படி சங்கரர் பத்மபாதருக்கு உத்தரவு இட்டாராம், விஜய யாத்ரை முடிவில் காஞ்சீபுரம் வந்து காஞ்சியில் இருந்து கொண்டே, ஒரே மாத காலத்துக்குள் சில சிஷ்யர்களை நாடெங்கும் அனுப்பித்து, பாரததேசம முழுமையும் ஷண்மதஸ்தாபனம் செய்யச்

செய்தாராம்! காஞ்சியில் ஓர் மடம் ஏற்படுத்தி அங்கு ஸுரேஸ்வரரை பீடாதிபதியாக நியமித்தாராம். காஞ்சியிலேயே, இந்த ஒரு மாத தவணைக்குள் ஸித்தி பெற்ருராம். இந்த நாடோடிக்கதையை எங்கும் பரப்பிவருவதுடன் இவ்விதமான ஜோடனைகளுடன் கூடிய ஓர் சங்கர விஜயத்தை சங்கரரின் பரம சிஷ்யரான ''அனந்தானந்த கிரி'' என்ற ஒரு கல்பிதமான பேர்வழி வெளியிட்டதாக — வெளியிட்டார்கள். சிதம்பரத்தில் ஆதிசங்கரரின் அவதாரம் (மலையாள தேசத்திலில்லை) காஞ்சியில் மடஸ்தாபனம்! சங்கரரின் ஸித்தியும் காஞ்சியில்! (அன்னிய நாட்டிலில்லை) இவ்விதம் கவர்ச்சியாகக் கூறும் இந்த சரித்ரம் நம் தமிழ் நாட்டுக்கே பெருமையைக்கொடுக்கிறபடியால் நாம் ஏன் ஆக்ஷேபிக்கவேண்டும் என்று ஒரு சாரரின் கொள்கை. ஆனுலும் ஆக்ஷேபனைகள் ஏற்பட்டன. அதனுல் மேற்படி சங்கர விஜயத்திற்கு திருத்தம் கொடுக்கப்பட்டது. காலடியில் சங்கரர் அவதாரம் என்று ஒப்புக்கொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டது. பின்னும் கும்பகோணம் மடத்தாரிடமிருக்கும் ஸ்படிகலிங்கத்துக்கு ஒரு பெருமை வேண்டும்! சங்கரர் கைலாசத்துக்குச் சென்றதாகவும், பரமசிவனிடமிருந்து ஐந்து லிங்கங்களைப் பெற்று வந்ததாகவும், நான்கை சில இடங்களில் பிரதிஷ்டை செய்து, ஐந்தாவது யோகலிங்கத்தை காஞ்சியில் பிரதிஷ்டை செய்ததாக, கல்பனை செய்யப்பட்டு, மேற்படி சங்கர விஜயம் திருத்தத்திற்குள்ளானது. இந்த சங்கர விஜயத்தில் (அஹிமஹி ராவணன், — சதகண்ட ராவணன் — சஹஸ்ரகண்ட ராவணன் கதைகளைப் போல) சங்கரர் திவாகரனை ஜயித்தார்; மாதவனை ஜயித்தார்; பரமதகாலனை ஜயித்தார்; திரிபுர குமாரனை ஜயித்தார்; கிரிஜா குமாரனை ஜயித்தார்; வடுக நாதனை ஜயித்தார் விஷ்ணுகுப்தனை ஜயித்தார்; சாரங்கபாணியை ஜயித்தார்; வியாஸதாஸனை ஜயித்தார்; ராமதீர்த்தனை ஜயித்தார்; என்பதாகவெல்லாம் பல பேர்வழிகளையும், நமக்குப் புலப்படாத, கேட்டறியாத மதங்களையும் கல்பனை செய்து, இவ்விதம் நாற்பத்தெட்டு அத்யாயங்களில் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. ஆனுல் கீழ்க்காட்டிய பிரதானம் வாய்ந்த சரித்ரங்கள் இந்த சங்கர விஜயத்தில் கூருமல் கைவிடப்பட்டது. (1) சிவகுருவும், ஆர்யாம்பாளும் தவம் செய்து அதன் பயனுக சர்வக்ஞுன புத்ரனை அடைந்தது. (2) கனகதாரா ஸ்தோத்ரத்தைக் கூறி தரித்ரம் வாய்ந்த ஸ்த்ரீயின் கிரஹத்தில் ஸ்வர்ண வர்ஷம் ஏற்படும்படி செய்தது. (3) பூர்ணுநதியை தன் தாயாரின் சௌகர்யத்துக்காக வீட்டின் அருகில் பிரவஹிக்கும்படி செய்தது. (4) தன் தாயாரிடம் ஸன்யாசத்துக்கு அனுமதி பெறுவதும், அவளுக்குக் கொடுத்த வாக்குறுதியும், அதன் படி தாயாரின் அந்திய காலத்தில் அவளுக்குப் பரமபதம் அளித்து' அந்திய கர்மாக்களை செய்து வைப்பது; (5) கோவிந்த பகவத்பாத

ரிடம் முதல் சந்திப்பில் "தசஸ்லோகி" யைக் கூறி தன்னை அறிமுகப் படுத்திக் கொள்வது; (6) காசியில் சண்டாள வேஷத்துடன் வந்த விஸ்வேஸ்வரரிடம் தனது வேதாந்த அனுபவத்தை "மனீஷா பஞ் சகம்" மூலம் தெரியப்படுத்தியது; (7) ஸனந்தனருக்கு பத்மபாத ரென்ற காரணப்பெயர் ஏற்பட நிமித்தமான சம்பவம்; (8) ஹஸ்தா மலக ஸ்தோத்ரமும், அவரை சிஷ்யராக ஏற்றுக்கொண்ட சம்பவம்; (9) ஸுரேஸ்வரருக்கு வார்த்திககாரர் என்ற பெயர் ஏற்பட நிமித் தம் வாய்ந்த சம்பவம்; (10) ஆனந்தகிரிக்கு தோடகர் என்ற பெயர் வரக்காரணமான சம்பவம்; (11) ஒரு காபாலிகன் ஆசார்யரின் சிரஸை யாசிப்பதும்; சிரஸை வெட்ட வாளை ஓங்கியபோது பத்ம பாதருக்கு, நரசிம்ம ஆவேசம் ஏற்பட்டு காபாலிகனை நிக்ரஹம் செய்த சம்பவம்; (12) காஷ்மீரத்தில் சங்கரர் ஸர்வக்ஞ பீடம் ஏறிய சரித்ரம் இவைகள்தான் சங்கர விஜயத்தில் பிரதான சரித்ரங்கள். இவைகளை நீக்கப்பட்ட தன்மையிலும், ஏதோ காதால் கேட்டறியாத சில பல்பஜ மான பேர்வழிகளை ஜயித்தார் என்ற நாடோடிக் கதைகளைக் கூறும் இந்த அனந்தானந்தகிரி சங்கர விஜயம், காஞ்சி மடத்துக்கு ஜீவனைக் கொடுக்கிறதாம்.

## V (*a*) காஞ்சி மடம் உருவான உண்மை

காஞ்சி மடம் உருவான உண்மை கீழே விவரிக்கப்படுகிறது. ஆதிசங்கரர் சிருங்கேரியை விட்டுப் புறப்பட்டு விஜய யாத்ரையாகச் செல்கிறார். ராமேஸ்வரத்திலிருந்து பல இடங்கள் மார்க்கமாகச் சென்று காஞ்சியில் ஒருமாதம் மட்டும் தங்கியிருந்தார். அங்கு தேவா லயத்தைப் புதுப்பித்து, வைதீக மார்க்கமான பூஜையைச் செய்யும்படி ஏற்பாடு செய்து, அங்கு வந்த ஆந்திர தேசத்தார்களை அனுக்ரஹம் செய்து, வேங்கடாசலபதியை சேவித்து, விதர்ப்ப ராஜதானிக்குச் சென்றார். மீண்டும் பல இடங்களுக்குச் சென்று, கௌடபாதரை தரி சித்து, காஷ்மீரத்தில் ஸர்வக்ஞ பீடாரோஹணம் செய்து பதரி, கேதா ரம் சென்று, கைலாஸ பதவியை அடைந்தார் என்பதாக மாதவீய சங்கர விஜயத்தின் வர்ணனை. சித்விலாஸீயத்தில் காஞ்சியில் சங்கரர் ஸர்வக்ஞ பீடாரோஹணம் செய்தார் என்ற ஓர் அதிகமான சம்பந்தம் காஞ்சிக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. இவ்வளவுதான் ஆதிசங்கர ருக்கும், காஞ்சிக்கும் உள்ள சம்பந்தம். காஞ்சியில் பல்லவர் முதலா னோரால் கட்டப்பட்டு, இப்பொழுது இருக்கும் கோவில்கள், கட்டடங் கள், சிலைகள் யாவும் ஆதிசங்கரர் காலத்தில் இல்லையென்று குறிப் பிடப்படுகிறது. ஆக காஞ்சியில் ஆதிசங்கரர் ஒருமாத காலத்துக்கு மேல் தங்கவும் இல்லை; மடம் ஸ்தாபிக்கவும் இல்லை; அங்கு அவர் தேக வியோகம் அடையவுமில்லை. இதுதான் உண்மை. பதினெட்டாவது நூற்றாண்டில் காஞ்சிபுரத்தில் தோன்றிய உபநிஷத் பிரம்மேந்திர

மடத்தின் பரம்பரையிலிருந்த ஓர் மடாதிபதி 37 வருஷங்களுக்கு முன் (1939ம் வருஷத்தில் வெளியிட்ட பிரசுரம் ஒன்றில்) ''எங்கள் மடமே தென்னிந்தியாவில் தோன்றிய முதல் அத்வைத மடம்" என்று தெளிவாகக் கூறியிருக்கிறார். ஆகவே 17, 18வது நூற்றாண்டில் காஞ்சியில் உபநிஷத் பிரம்மேந்திர மடத்தைத் தவிர வேறோர் மடமும் கிடையாது என்பதும், அதிலும் ஆதி சங்கரரே பிரதிஷ்டை செய்ததாக இன்று கற்பனை செய்து கூறப்படும் ''காமகோடி பீட மடமும்" கிடையாது என்பதும் மேற்படி பிரசுரம் மூலம் ஸித்திக்கிறது. காஞ்சீபுரத்துக்கு மிக சமீபத்தில் இருக்கும் அடையபலத்திலிருந்த அப்பய்ய தீக்ஷதரின் சரித்ரத்தில் காஞ்சியில் ''காமகோடி பீடம்" என்ற மடமாவது இதில் அப்பய்ய தீக்ஷதருக்கு சம்பந்தம் இருந்ததாகவாவது (ஸ்ரீராமேசனுடைய புஸ்தகம் உள்பட) யாதொரு வரலாறும் கூறப்படவில்லை. இதே போல காஞ்சிக்கு சமீபத்திலேயே உள்ள ஸ்ரீபெரும்புதூரில் அவதரித்த ஸ்ரீ ராமானுஜாச்சாரியார் காலத்திலும் காஞ்சியில் ''காமகோடி மடம்" இருந்ததாக வரலாறு கிடையாது. அவ்விதம் இருந்திருந்தால் யாதவப்ரகாசரிடம் ஸ்ரீ ராமானுஜர் வாசித்து இருந்திருக்க வேண்டிய அவசியம் இருந்திருக்காது. விசிஷ்டாத்வைத மதத்தை காஞ்சியில் ஊர்ஜிதம் செய்ய ''காமகோடி பீடாதிபதியிடம்" வாதம் ஏற்பட்டிருக்க வேண்டும். அப்படி வரலாறுகள் கிடையாது. அதன் பிறகும் பல முறை காஞ்சிக்கு விஜயம் செய்த ஸ்ரீவேதாந்த தேசிகர் காஞ்சியிலுள்ள காமகோடி பீடாதிபதிகளோடு வாதம் புரிந்ததாக சரித்திரம் கிடையாது. கி. பி. 1842க்குப் பிறகுதான் காஞ்சியும் காமகோடி பீடமும் எவ்விதம் என்றால் கி. பி. 1704ம் வருஷம் முதல் கோவிந்த தீக்ஷதரின் மரபில் ஓர் பரம்பரை தஞ்சாவூரில் கீழ்க்கண்டவிதம் உருவானது.

1704 முதல் 1746 வரை மஹாதேவர் 1.
1746 முதல் 1783 வரை சந்திரசேகரர் 1.
1783 முதல் 1814 வரை மஹாதேவர் 2.
1814 முதல் 1851 வரை சந்திரசேகரர் 2.
1851 முதல் 1890 வரை மஹாதேவர் 3.
1890 முதல் 1907 வரை சந்திரசேகரர் 3.
1907 முதல் (ஏழு அல்லது எட்டு தினங்கள்) மஹாதேவர் 4.
190[illegible] முதல் இன்று வரை சந்திரசேகரர் 4.

(குறிப்பு:- மஹாதேவர் - சந்திரசேகரர் என்று அடுத்தடுத்து மாறி வருவதை கவனித்தால் இவர்கள்தான் உண்மையான ஹொய்சால

---

குறிப்பு:- ஆதிசங்கரருக்கு கன்னட பாஷையால் குறிப்பிடப்படும் ''சிக்க உடையார்'' என்ற பட்டம் உண்டு என கும்பகோணம் சுவாமிகள் 26-11-72ம் தேதிய கல்கி பத்திரிகையில் கூறியிருப்பது வரலாறு காணாத பொய் பிரசாரமேயாகும்.

பிராம்ஹணஸன்யாஸிகளின் பரம்பரை என்றும், இதற்குமுன் பரம்பரையில் காட்டப்பட்ட பேர்வழிகள் கல்பிதம் என்றும், ஊகித்தறியலாம்). ஹைதர்அலி மைசூர் ராஜ்யத்தைக் கைப்பற்றுமுன் மேற்காட்டிய மஹாதேவர் 1. சிருங்கேரி சென்று சிருங்கேரி குருவிடமிருந்து "சிக்க உடையார்" என்ற கன்னட பாஷை பட்டத்துடன் தஞ்சாவூரில் சிருங்கேரியின் பிரதிநிதியாக இருக்கும்படி ஏற்பாடாகியதாகத் தெரிய வருகிறது. இன்றும் "சிக்க உடையார்" என்ற அந்தஸ்திலேயே பல ரிக்கார்டுகளும், பல கோர்ட்டு நடவடிக்கைகளும் இருந்து கொண்டிருப்பதும் இம்மடத்தை சாரதா மடம் என்று கூறப்படுவதும் இதற்குச் சான்ருக ஆகும். ஆக மஹாதேவர் 1 முதல் இந்த தஞ்சாவூர் மடம் சிருங்கேரியின் (கிளை) சாகாமடம் என்று ஏற்படுத்தப்பட்டது. இதை வைத்தே தஞ்சாவூரில் டிஸ்டிரிக்ட் ஜட்ஜாக இருந்த Doctor பர்னல், தஞ்சாவூர் லைப்ரரியிலிருந்த ஆனந்தகிரி சங்கர விஜயத்தைக் குறித்து 19ம் நூற்ருண்டிலேயே கீழ்க்கண்டவிதம் ரிக்கார்டு செய்திருக்கிருர். This seems to be quite a modern work, written in the interest of the Schismatic Matha on the coromandal coast, which have renounced obedience to the Sringeri Matha where Sankaracharya's legitimate successor resides". இவ்விதம் 19வது நூற்ருண்டில் ஜட்ஜாக விளங்கின, Dr. பர்னல் கும்பகோணம் மடத்தை சிருங்கேரியின்சாகா மடமென்று ஒப்புக்கொண்டு, அதன் ஆதிக்யத்திலிருந்து நழுவுவதாகவும் ரிக்கார்டு செய்து வைத்திருப்பதை யாவரும் அறிந்து கொள்ளவேண்டியது. மஹாதேவர் 1, சந்திரசேகரர் 1 இவர்களுக்கு அந்தக்காலத்தில் தஞ்சாவூர் ராஜாக்களின் ஆதரவு கிடையாது என்பதும் குறிப்பிடத்தக்கது. மைசூர் ராஜ்யத்தை ஹைதர் அலியும், திப்பு சுல்தானும் கைப்பற்றிய பின்னர்தான் தஞ்சாவூர் ஹிந்து மன்னர், முகம்மதியரிடத்திலிருந்த விரோத மனப்பான்மையால் மஹாதேவர் 2 முதல் தஞ்சாவூர் மன்னர்களால் ஆதரிக்கப்பட்டனர். கி.பி. 1821ம் வருஷத்தில் தஞ்சாவூரை ஆண்ட சரபோஜி ராஜாவால் கும்பகோணத்தில் மடம் கட்டப்பட்டு, தஞ்சாவூரிலிருந்து கும்பகோணத்துக்கு மடத்தின் மாறுதல் ஏற்பட்டது. இங்கு இவ்விதமிருக்க ஹைதராபாத்தில் முகாம் செய்த கூடலீ மடம் ஸ்வாமிகள் ஹைதராபாத்திலுள்ள கோர்ட்டில் தனக்கு சிருங்கேரி ஜகத்குருவுக்கு ஸமமான உரிமைகள், நிஜாம் ராஜ்யத்தில் கிடைக்க வேண்டுமென வழக்குப் போட்டார், இவ்வழக்கை விசாரணை செய்து நிஜாம் ராஜ்ய கோர்ட்டாரால் 1843–1844 —1845ம் வருஷங்களில் தீர்ப்பு அளிக்கப்பட்டது. சிருங்கேரி ஜகத்குருவுக்கு கிடைக்கத்தக்க உரிமைகள் கூடலி மடத்துக்கு கிடைக்க தக்கதில்லை என்று தீர்ப்பில் கூறியதுடன் நிற்காமல், கூடலி போன்ற சாகா மடங்களான சிவகங்கா, ஆவணி, புஷ்பகிரி, விருபாக்ஷி, கும்ப

கோணம், கார்வார், ராமச்சந்திரபூர், தீர்த்தராஜபூர், பாண்டிகடே மடங்களுக்கும் சிருங்கேரி மடத்தின் உரிமைகள் கிடைக்கத்தக்கதில்லை யென்று நிஜாம் ராஜ்ய கோர்ட்டார் உத்தரவு போட்டுள்ளார்கள். ஆக கி.பி. 1843ம் வருஷத்திலும் "கும்பகோணம் மடம்" என்றும் "சாகா (கிளை) மடம்" என்றும் நிஜாம் ராஜ்யமான ஹைதராபாத்தில் கூட இம்மடத்தின் அந்தஸ்து குறிப்பிடப்பட்டுள்ளதாக மேற்படி தீர்ப்பின் மூலம் வெளியாகிறது கி.பி. 1763ம் வருஷத்தில் காஞ்சியி லுள்ள பேரி செட்டியார்களுக்கும். கோமுட்டி செட்டியார்களுக்கும் ஒரு வியவகாரம் ஏற்பட்டு வாலாஜாபேட் நவாபிடம் விசாரணைக்கு வந்தது ஹிந்துக்களின் வழக்கு ஆகையாலும், இருதரப்பாரும் சிருங்கேரி மடத்து சிஷ்யர்கள் ஆகையாலும், சிருங்கேரி ஜகத்குருவின் அபிப்ரா யத்துக்கு கட்டுப்படுவதாக ஒப்புக்கொண்டபடி சிருங்கேரி ஜகத்குரு வுக்கே தீர்மானிக்க விட்டதாகவும் அதன்படி நவாப் தீர்ப்பு அளித்த தாகவும், கோர்ட்டு ரிக்கார்டுகள் இருக்கின்றன. அப்பொழுது காஞ்சி யில் மடம் இருந்திருந்தால், அபிப்ராயம் கேட்பதற்கு ஏன் சிருங்கேரி ஜகத்குருவை நாடவேண்டும்? அதனால் காஞ்சியில் அப்பொழுது மட மில்லையென்பது புலனாகிறது.

காஞ்சீபுரத்துக்கு கி.பி. 1791ம் வருஷத்தில் திப்பு சுல்தான் வந்த தாகவும், தன் தகப்பனரால் ஆரம்பிக்கப்பட்ட கோவில் திருப்பணிகள் முடிவடையாததால், அதற்கு செலவு செய்து பூர்த்தி செய்வதற்கும், தனக்கு யுத்தத்தில் ஜயம் ஏற்பட பூஜைகள் செய்து தரும்படியும், இதற்கு சிருங்கேரி ஜகத்குருவை நியமித்ததாகவும் சரித்ரங்கள் காணப் படுகின்றன. காஞ்சியில் குரு இருந்திருந்தால், அல்லது இப்போது நூதன கல்பனை செய்து கூறப்படுவதுபோல காஞ்சீ குரு தஞ்சாவூரை வாச ஸ்தானமாக ஏற்படுத்திக் கொண்டதாக அன்று வரலாறு இருந் திருந்தால், தஞ்சாவூர் மடாதிபதியை விட்டுவிட்டு, சிருங்கேரி ஜகத் குருவை திப்புசுல்தான் ஏன் நியமித்திருக்க வேண்டும்? இவ்வித கற் பனை 1843ம் வருஷத்துக்குப்பிறகு ஏற்பட்ட After thought என்று தான் சொல்ல வேண்டும். உண்மை வரலாறு அப்படி அல்ல.

## V (b) கும்பகோண மட வரலாறு

முன்னம் கர்நாடகதேசத்தைச் சேர்ந்த "ஹொய்சால பிராம்மண" வகுப்பைச் சார்ந்த கோவிந்த தீக்ஷதர் என்ற ஒருவர் சோழ தேசத்து மன்னரிடம் மந்திரியாக இருந்தார். அவர் உயரிய வித்வான். ராஜ்ய நிர்வாகத் திறமை வாய்ந்தவர். சோழ தேசத்தில் பல நன்மைகளைச் செய்து, நல்ல கீர்த்தியுடனும், செல்வாக்குடனும் இருந்தவர். இவரு டைய செல்வாக்கை வைத்து இவருக்குச் சொந்தக்கார ஹொய்சால பிராம்மண குடும்பங்கள் பல மைசூரிலிருந்து தஞ்சாவூரில் குடியேறி னர். இவருடைய மரபில் ஒருவர் 18வது நூற்றாண்டின் ஆரம்பத்தில்

ஸன்யாச ஆஸ்ரமம் வாங்கிக்கொண்டு, கோவிந்த தீக்ஷதரின் செல் வாக்கின் காரணமாக தஞ்சாவூரிலேயே சாதாரண ஸன்யாசியாக விளங்கி வந்தார். ஆனாலும் அப்போது அவருக்கு மடத்தின் சம்பந்தம் கிடையாது. இவரை முதலாகக் கொண்டு கி.பி. 1704 முதல் இன்று வரை ஒரு பரம்பரை காணப்படுகிறது. இதை 11ம் பக்கத்தில் காட்டப் பட்டிருக்கிறது. இவர்கள் ஹொய்சால பிராம்மண வகுப்பைச் சேர்ந்த வர்கள் எனவும் ரிக்வேதிகள் எனவும் தெரிகிறது. கி.பி. 18‹6ம் வருஷத்தில் பிரசுரமான "பிரம்ம வித்யா X வது வால்யூமில், அன்று வரை நான்கு அல்லது ஐந்து ஆசார்யர்களே, கும்பகோணம் மடத்தில் பூர்வமிருந்தார்கள் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. அந்த புஸ்த கத்தில், அந்த மடத்தின் வரலாரை அன்று குறிப்பிட்டுள்ளது உண் யாகவே இருக்கவேண்டும். ஆகவே கி.பி. 1704க்கு முன் ஏதோ பரம் பரை உள்ளதுபோல காண்பிக்கப்பட்டது கல்பனு மாத்ரமே என்பதற்கு கல்பனு காஞ்சீ மடத்தின் குரு பரம்பரையிலுள்ள சில குருமார்களைப் பற்றி சரித்ர ஆராய்ச்சி முடிவுகள் கீழே காண்பிக்கப்படுகிறது.

### (i) ஸர்வக்ஞாத்மா

கும்பகோணம் மடம் பரம்பரையில் ஆதிசங்கரருக்குப்பின் ஸுரே ஸ்வரராம்! இவர் சிருங்கேரி குரு பரம்பரையில் பீடம் வகித்ததற்கு சிருங்கேரியில் அவருடைய சித்தி ஸ்தலத்திலுள்ள ஆலயமே அத் தாக்ஷி — Monumental Proof என்று முன் கூறப்பட்டது. தவிர இவர் கிரஹஸ்தராயிருந்து ஸன்யாசம் வாங்கிக் கொண்டபடியால் பீடாதிபத்யம் வஹிக்கவும், யோகலிங்கத்தைப் பூஜை செய்யவும் தகுதி யற்றவர் என கும்பகோணம் மடத்தாரின் ஒரு புஸ்தகம் கூறுகிறது மற்ருேர் புஸ்தகம் இவர் காஞ்சியில் பீடாதிபத்யத்தில் நியமிக்கப் பட்டார் என்று கூறுகிறது. இந்த முரண்பாடு பரிகரிக்கப் படாம லேயே இன்றும் கும்பகோண மடத்தார், இரண்டு விதமாயும் கூறிக் கொண்டு வருகின்றனர், நம்புகிறவர்கள் நம்பிக்கொண்டுமிருக்கிருர் கள். ஸுரேஸ்வரருக்குஅடுத்தாற்போல ஸம்க்ஷேப சாரீரகம் எழுதிய ஸர்வக்ஞாத்மா என்று குறிப்பிடபட்டிருக்கிறது. இவர் கி.மு. 406 முதல் கி.மு. 394 வரையிலும் பீடாதிபத்யம் வஹித்ததாக கல்பனை ஸர்வக்ஞாத்மாவைப் பற்றி ஆராய்ச்சி நிபுணரான K.A. நீலகண்ட சாஸ்திரியள் ஆங்கிலத்தில் எழுதியிருப்பதை கீழே காட்டப்பட்டிருக் கிறது. "Sarvajnatman was the next author. He flourished in *Travancore* at the end of the *Tenth Century*. His authoritative Sankshepa Sariraka with its fine literary flavour is his chief work but he also wrote Pancha praekriya and Pramana Lakshana. This last work on epistemology is accepted by Mimamsakas as well as Vedantins". இதிலிருந்து திருவனந்தபுரத்தில் 10ம் நூற்ருண்டிலிருந்த ஸர்வக்ஞாத்மாவை, காஞ்சியில் காமகோடி பரம்பரையில் கிமு 406 முதல் 394 வரை பீடாதி பதியாக

இருந்தாரென்பது எவ்விதம் பொருந்துமென்பதை யாவரும் விமர்சம் செய்யும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். இந்த ஸர்வக்ஞாத்மா தன் ஏழாவது வயதிலேயே ஆதிசங்கரருடன் வாதம் செய்து அவரை பிரமிக்கச் செய்தாராம். குசலவாள் ஸ்ரீ ராமரின் அஸ்வமேதக் குதிரையைக்கட்டி ஸ்ரீ ராமரையும் ஜயித்தார்கள் — அஸ்வமேதயாகம் முடிந்தபின் குசலவாளுக்கு முடிசூட்டி ஸ்ரீ ராமர் சரயூ நதியில் ஜல ஸமாதி அடைந்தாரென்ற நாடோடிக் கதையைப் போல் ஸ்ரீ சங்கரர் ஸர்வக்ஞாத்மாவைப் பார்த்து பிரமித்துப் போய் அவருக்கு பீடாதிபத்யம் கொடுத்து காஞ்சியில் ஸித்தியடைந்தார் என்பதைகும்பகோணம் மடத்தார் சொல்வதால் நம்ப வேண்டும்.

### *(ii)* மூகசங்கரர்

மத்தியில் 20வது குருவான மூகசங்கரரைப்பற்றி கவனிப்போம். காமாக்ஷியம்மன் அநுக்ரஹத்தால் காமாக்ஷியம்மனைக் குறித்து "மூக பஞ்சசதி" என்றும் 500 ஸ்லோகங்களால் அத்புதமாக வர்ணித்தவர் மூககவி. இந்த ஸ்தோத்ரங்கள் ஒப்புயர்வற்று விளங்குகின்றன என்பதில் விவாதமில்லை. இவர் காமகோடி பரம்பரையில் மூகசங்கரர் என்ற பெயருடன் 20வது குருவாக கிபி 398 முதல் 437ம் வருஷம் வரை பீடாதிபதியாக இருந்தாராம். மூககவி 16ம் நூற்றாண்டிலிருந்தாக ஆராய்ச்சியாளர்கள் குறிப்பிட்டுள்ளதாகத் தெரிய வருகிறது. இந்த மூகசங்கரர் "பிராசீன சங்கரவிஜயம்" என்ற புஸ்தகத்தை எழுதியதாக கும்பகோணம் மடத்தாரின் வரலாறு கூறுகிறது. காமாக்ஷி ஸ்தோத்ரமான மூகபஞ்சசதியின் அழகை ரசித்தவர்கள் இவருடைய கிரந்தமான சங்கரவிஜயத்தையும் பார்க்கவேண்டுமென்று முயற்சி செய்து பார்த்தும், அது ஒருவருக்கும் அகப்படாமலேயே ஒளிந்து கொண்டு விட்டது. அப்படியே அது வெளி வந்தாலும் மூகபஞ்ச சதியைப் பார்த்த எந்த விமர்சகரும், மேற்படி சங்கரவிஜயம் மூகசங்கரர் செய்ததல்ல என்று கூறிவிடுவார்கள் என்பதில் சந்தேகமில்லை. மூகபஞ்சசதியில் அமைந்தபடி அவருடைய ஸம்ஸ்க்ருத காவ்ய நடை, சங்கரவிஜயத்தில் இல்லையென யாவரும் கூறக்கூடுமென்றுதான் அது வரவில்லையோ என்னமோ! இவர் இயற்றிய மூக பஞ்சசதியை கிரந்தலிபியில் 1937ம் வருஷத்தில் கும்பகோணத்திலிருக்கும் சாரதா விலாஸ் முத்ராலயத்தில் அனந்தராம சாஸ்திரியால் அச்சடிக்கப்பட்டு TM. நாராயண சாஸ்திரியால் பரிசோதிக்கப்பட்டு வெளியிட்டிருக்கிறார்கள். இதற்கு 'கவிமணி" பண்டித VK சுப்ரமண்ய சாஸ்திரி ஓர் முன்னுரை எழுதியிருக்கிறார் இந்த முகவுரையில் மூககவியைப்பற்றி சில விஷயங்கள் இவ்விதம் கூறப்படுகிறது. "காமாக்ஷியின் பாதகமலங்களில் ஈடுபட்டவரும், மந்திர ஜபங்களாலும், குங்குமம், தாமரை முதலிய புஷ்பங்களால் தேவியின் பாதகமலங்களை அர்ச்சித்தும் அந்த திவ்ய மூர்த்தியை மனதால் இடைவிடாது தியானம் செய்துகொண்டும் ஓர்

பிராம்மணன் காலக்ஷேபம் செய்து கொண்டு வந்தார். அவர் தினந் தோறும் இரவில் காமாக்ஷி ஆலயம் சென்று அர்த்தஜாம பூஜைவரை தர்சனம் செய்துகொண்டும் தனக்கு தங்கு தடையற்ற கங்கா பிரவாஹம் போன்ற வாக்விலாஸமேற்பட வேண்டுமென்றும் பிரார்த்தித்து வந்தார். இந்த ஆலயத்தில் ஓர் மூகனும (ஊமையும்) (தஸ்ய ஜாத் யாதிகம்ந ஞாயதே என்று இவ்விடத்தில் மூகனைப்பற்றி சம்ஸ்க்ருதத்தில் வர்ணிக்கப்பட்டிருக்கிறது). அந்த ஆலயத்தில் பிரதக்ஷணம் செய்யும் மார்க்கத்திலுள்ள குப்பைகளை நீக்கும் காரியத்தைச் செய்து கொண்டும், இதன் பொருட்டு ஆலய அதிகாரிகளால் கொடுக்கப்படும் உணவால் ஜீவனம் செய்து கொண்டும் தேவியின் அர்த்த ஜாம பூஜாதீபாராதனத்தைப் பார்ப்பதால் தன்னை கிருதார்த்தனுக்கிக் கொண்டும் இருந்து வந்தான். (ஜாதி, பெயர் முதலிய விபரங்கள் தெரியவில்லை என்றிருப்பதை கவனிக்கவும்) ஒரு சமயம் அர்த்த ஜாமம் முடிவடைந்து அர்ச்சகர்கள் வெளியேறிய பின்னர் மேற் சொன்ன பிராம்மணனும், மூகனும் மட்டும் ஆலயத்திலிருந்தபோது ஆலயக்கதவுகள் மூடப்படும் தருவாயில் கர்ப்பக்கிரஹத்திலிருந்து தேவி ஆவிர்பவித்து சர்வாலங்கார பூஷிதையாயும், தாம்பூலம் தரித்த முகமுடனும் பிராம்மணன் சமீபம் வந்து தன் வாயிலிருக்கும் தாம்பூல உச்சிஷ்டத்தை பிராம்மணன் வாயில் சேர்ப்பிக்க வேண்டுமென்ற எண்ணத்துடன் வாயைத்திற என்று கூறினள். ஆனல் துரதிருஷ்டத் தால் தடையுற்ற பிராம்மணன் இந்த உச்சிஷ்டத்தைப் பெறக்கூடாது என்று எண்ணி வெளியேறிவிட்டான். தேவி மூகன் சமீபம் வந்து வாயைத்திற என்று கூறினள். மூகனும் பாதாள குஹாவாயில்போலத் தன்வாயை மிகவும் விசாலமாகத்திறந்தான். தேவி தன் வாயிலிருந்த தாம்பூல உச்சிஷ்டத்தை மூகன் வாயில் உமிழ்ந்து விட்டு மறைந்தாள். மூகனும் உடனேயே உயரிய வாக்விலாசத்தை அடைந்து தேவியை ஐநூறு ஸ்லோகங்களால் துதித்தான்.

எந்த அளவு தேவையோ, அந்த அளவுமட்டும் மூககவியைப்பற்றி அந்த சம்ஸ்கிருத முகவுரையில் காட்டியபடி தமிழ் தாத்பர்யம் கொடுக்கப்பட்டுள்ளது. இவ்விடம் சொல்ல வேண்டியது என்னவென்ருல் மூக கவியினுடைய ஜாதி முதலியவை தெரியாத இந்த நிலையில், அவனை பிராம்மணனெனக்கருதி, ரிக்வேதி எனவும் கருதி இந்த குரு பரம்பரையில் எவ்வாறு குறிப்பிடப்பட்டது என்பதை ஆராய்ச்சியாளரின் முடிவுக்கு விட்டுவிடுகிருேம். குரு பரம்பரைக்கு ஓர் தகுதியான ஆசாமியைப் போட வேண்டும். காஞ்சியிலேயே அதிலும் காமாக்ஷி ஆலயத்திலேயே வாக்ஸித்தி பெற்ற பெருமை வாய்ந்தவர் மூககவி. இவரை குரு பரம்பரையில் சேர்த்தால், ரிஷி மூலம் நதி மூலம் விசாரிக்கக் கூடாது என்ற நியமத்தை வைத்து மூககவியை பிராம்மணனு — ரிக் வேதியா என யார் கேட்கப்போகிருர்கள் என்ற தைர்யத்தால் குரு

பரம்பரையில் சேர்க்கப்பட்டுவிட்டது என்று கூறினல் மிகையாகாது.

## (*iii*) வித்யாதீர்த்தர்

ஸ்ரீ வித்யாதீர்த்தரை காமகோடி பீடத்தில் 51வது அதிபதியாகவும் அவர் மேற்படி பீடத்தில் கி.பி. 1297 முதல் 1385 வரை அமர்ந்திருந்த தாகவும் காண்பிக்கப்பட்டுள்ளது. சிருங்கேரியில் துங்கா நதிக்கரை யிலிருக்கும் வித்யாதீர்த்தருடைய அழகான ஆலயத்தைப் பார்த்த யாவரும் இவரை காஞ்சியில் ஆசார்ய பதவி வகித்தார் என்னும் கூற்றை — சோற்றில் முழுப்பூசணிக்காயைத் திணிப்பது என்ற பழ மொழி போல — நம்பமாட்டார்கள். இதற்கு மேலும் மற்ருேர் அபாண்டமென்னவென்ருல் பாரதீ கிருஷ்ண தீர்த்தரும், வித்யாரண் யரும் மேல் சொன்ன காஞ்சி வித்யாதீர்த்தரின் சிஷ்யர்களாம். வித்யா ரண்யரை காஞ்சியிலிருந்து சிருங்கேரிக்கு அனுப்பி அவரைக் கொண்டு, அங்கு விச்சின்னமான பரம்பரையைப் பூர்த்தி செய்ய பாரதீ கிருஷ்ண தீர்த்தருக்கு பட்டம் கட்ட ஏற்பாடு செய்தார்களாம். இந்தப்புளுகு எவ்வளவு மட்டரகம் என்பதை அறியலாம். உண்மை சரித்ரம் என்ன? சிருங்கேரியில் தொடர்ந்து பரம்பரை இருந்து வரு வதும், வித்யாதீர்த்தர் சிருங்கேரியில் பீடம் வகித்தார் என்பதும், அடுத்தாற்போல பாரதீ கிருஷ்ணதீர்த்தர் பட்டத்துக்கு வந்தார் என வும், வித்யாரண்யர். விஜயநகர சமஸ்தானத்தை உருவாக்கியும், மகம்மதியர்களால் அழிக்கப்பட்ட பிராசீன கிரந்தங்களை நூதனமாக வேதபாஷ்யம் முதலியவற்றைப் புதுப்பித்தும், வேதாந்த தேசிகரை விஜயநகர சமஸ்தானத்துக்கு அழைத்தும் கூட தேசிகர் மறுத்தும், பின்னர் பாரதீ கிருஷ்ண தீர்த்தருக்கு அடுத்தபடியாக சிருங்கேரி பீடாதிபதியாக வித்யாரண்யர் விளங்கியதும் வரலாறு கண்ட உண்மை. இது எவ்வளவு தூரம் கும்பகோணம் மடத்தாரால் திரித்துக் கூறப் படுகிறது என்பதைக் கேட்டால் நமக்கு நடுக்கமெடுக்கிறது — தலை சுற்றுகிறது! தவிரவும் கும்பகோணம் மடத்துக்கே உரிய கல்பித பட்ட மான "இந்திர சரஸ்வதி" யோகபட்டமல்லாததும்; நான்கு ஆம் னுயங்களுக்கே உரிய யோக பட்டமான "தீர்த்த - அரண்ய" என்ற சம்பிரதாய பட்டங்களை வகித்த வித்யா தீர்த்தரையும், பாரதீ கிருஷ்ண தீர்த்தரையும், வித்யாரண்யரையும் கும்பகோணம் மடத்தில் சம்பந்தப் படுத்தியிருக்கிருர்கள் என்பது ஆச்சர்யத்தையே கொடுக்கிறது. இதி லிருந்தே இது ஓர் நம்பத்தகாத கற்பனைதான் என்று யாவரும் அறிந்து கொள்ளலாம்.

## (iv) பகவன்னும போதேந்திரர்

ஆதியில் ஒரு குரு விஷயமாகவும், மத்தியில் இரண்டு குருக்கள் விஷயமாகவும், ஆராய்ந்து பார்க்கப்பட்டது. கடைசியிலும் ஒரு உதாரணம் காட்டப்படுகிறது. பகவந்நாம மகிமையைக் கூறி

நாடெங்கும் பக்தி மார்க்கத்தைப் பரப்பிய போதேந்திரர் காஞ்சிகாம கோடி பீடத்தின் 57வது குருவாம். அவர் இயற்றிய கிரந்தங்களில் தான் பீடாதிபதியாக இருந்ததாக ஓரிடத்திலும் காட்டப்படவில்லை. இவருடைய சமாதி ஸ்தலம் கோவிந்தபுரத்திலுள்ளது. இது கும்ப கோணம் மடத்தார் வசமில்லை. வேறொர் கமிட்டியார் கும்பகோண மடத்தின் சம்பந்தமில்லாமலேயே -காமகோடி பீடாதிபதி என்ற அந்தஸ்தைக் கொடுக்காமலேயே — வருஷந்தோறும் ஆராதனை நடத்தி வருகிறார்கள். இந்த சமாதி ஸ்தல விஷயமாக Endowment போர்டார் வழக்குப்போட, அதை பிரத்யேகமான நிர்வாகஸ்தர்கள் எதிர்வாதம் செய்ததாகவும், கும்பகோணம் மடத்தார் சம்பந்தப்பட வில்லையென்றும் தீர்ப்புகளிலிருந்து அறியப்படுகிறது. அப்படியிருந் தும் பகவந்நாம போதேந்திரர் கும்பகோண மட பரம்பரையில் அடங்கி யதாகக் காட்டப்படுவது அதிசயமாகவே இருக்கிறது. ஆக, பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்ற பழமொழி போல குரு பரம்பரை யின் தொடக்கத்திலும், மத்தியிலும், முடிவிலும் பல சான்றுகள் மூலம் பரம்பரை கல்பிதம் என்று நிரூபணம் செய்யப்பட்டுள்ளது. பரம் பரையில் காட்டிய குருமார்களின் புகழை மிக விஸ்தாரமாக கல்பனை கிரந்தங்களில் வர்ணிக்கப்பட்டுள்ளது. இவ்வளவு புகழ் வாய்ந்த சுமார் 50 அல்லது 58 குருமார்களின் ஸித்தி ஸ்தலங்கள் எங்கே என் பதை கும்பகோணம் மடத்தார் இன்னும் குழிகளைத் தோண்டித் தோண்டிப் பார்த்துக் கொண்டிருக்கிறார்களாம்! அகப்பட்டபின் நாமும் காஞ்சி காமகோடி பீட குரு பரம்பரையை நம்புவோம். (இந்த குரு பரம்பரையின் முழு விஸ்தாரத்தையும் J.V. ராஜகோபால சர்மாவின் "சங்கர மட விமர்சனம்" என்ற புஸ்தகத்திலும் R. கிருஷ்ணசாமி அய்யரின் "Truth about Kumbakonam Mutt" என்ற புஸ்தகத்திலும் பார்த்துத் தெரிந்து கொள்ளவேண்டியது அவசியம்).

## VI (i) முன் குருக்களும் செல்வாக்கு ஆரம்பமும்

கோவிந்த தீக்ஷிதரின் மரபில் வந்த சில ஸன்யாசிகள்தான் தஞ் சாவூரிலேயே பிறந்தும் கி.பி. 1704க்குப் பிறகு ஸன்யாஸம் வாங்கிக் கொண்டும் இருந்தவர்கள். காஞ்சியிலிருந்ததாகவோ, அங்கிருந்து ஏதோ நிமித்தமாக தஞ்சாவூருக்கு 18ம் நூற்றாண்டின் மத்தியில் வந்த தாகவோ, ஹொய்சால பிராம்மண வகுப்பைச் சேர்ந்த ஸன்யாஸி களுக்கு நேர்ந்ததாகக் கூறுவது ஒரு பின் யோசனை (After thought) தான். ஆதியில் இவர்களுக்கு தஞ்சாவூர் ராஜாவின் சம்பந்தமாவது மட சம்பந்தமாவது கிடையவே கிடையாது. ஆராய்ச்சியாளர் ஒருவர் குறிப்பிட்டிருக்கிறார். "Full particulars are not available about Acharyals 1 to 67. What I have given below about them are taken from Mr N.K. Venkatraman's book. But his dates are inaccurate".

ஆக கி.பி. 1704 முதல் 1814ம் வருஷம் வரை இருந்ததாகக் கூறப் படும் குருக்களின் வரலாறுகளாவது, தேதிகளாவது சரியில்லையென் பதும், அவர்கள் தஞ்சாவூரில் குடியேறின ஹொய்சால பிராம்மணர் கள் என்ற அளவும்தான் தெரிகிறது. மற்ருேர் புஸ்தகம் தெரிவிப் பதாவது "His immediate predecessors seem to have led a wandering life mostly in southern districts; during the troublesome time of Karnataka War". ஆக 18ம் நூற்ருண்டின் கடைசி பாகம் வரை இவர்களுக்கு மட சம்பந்தம கிடையாது என்பது வெட்ட வெளிச்சம். சிக்குடையார் என்ற அந்தஸ்து ஏற்படுவதற்கு முன்னும், ஏற்பட்ட பின் சில காலமும், தஞ்சாவூர் மன்னர்களின் ஆதரவு இவர்களுக்கு இருந்தது என்று கூறுவதற்கு யாதொரு சான்றுகளுமில்லை. ராஜா பிரதாப்சிங்கும் மன்னுர்குடியிலிருந்த ஒருவரை ராஜ குருவாக ஏற் படுத்திக் கொண்ட வரலாறு, சில கோர்ட் தீர்மானங்களிலிருந்து தெரிய வருகிறது. அந்த ராஜ குரு பரம்பரையே பிரதாப்சிங்கின் வாரிசுகளுக்கும் ராஜகுரு என்று அந்த வழக்கிலிருந்து புலனுகிறது. சிக்குடையார் என்ற அந்தஸ்திலேயே ஜனங்களுடன் பழகிக்கொண்டு, சிருங்கேரி பீடத்தின் காரியங்களை செய்து வந்திருப்பதாய் நிரூபண மாகிறது. ஆதி காலத்திய சிருங்கேரி ஜகத்குருவான ஸ்ரீ நரசிம்ம பாரதீ ஸ்வாமிகளின் படங்களை, தஞ்சை திருச்சி வட்டாரங்களில்கூட சில பேர்களின் வீடுகளில் இன்றைக்கும் காணலாம்.

### (*ii*) சிக்குடையாருக்கு கும்பகோணத்தில் மடம் ஏற்பட்ட வரலாறு

இந்த சமயத்தில் சிருங்கேரி க்ஷேத்ரத்தைக் கொண்டுள்ள மைசூர் ராஜ்யம் ஹிந்து அரசர்களிடமிருந்து மாறி முகம்மதிய மன்னர் களான ஹைதர் அலி, திப்பு சுல்தான் இவர்களுடைய வசம் வந்து சேர்ந்தது. இந்த நிலை தஞ்சாவூரிலிருந்த சிக்க உடையார் ஸ்வாமிக்கு ஒரு புதிய திருப்பத்தை ஏற்படுத்தியது. இந்த கட்டத்தில் சிருங் கேரி முகம்மதிய நவாபுகளுக்கு உட்பட்டுப் போனதாகக் கருதப்பட்டு, மஹாராஷ்ட்ரதேச ஹிந்து மன்னரும், தஞ்சாவூரிலுள்ள மஹா ராஷ்டிர ஹிந்து மன்னரும், மைசூர் நவாபுடன் பகை கொண் டனர். சிருங்கேரி மடத்தின் மேலும் அவர்களுக்கு துவேஷ மனப் பான்மை ஏற்பட்டது. ஏன்? ஒரு மஹாராஷ்ட்ரசேனை 1791ம் வருஷத் தில் திப்புசுல்தான் பேரில் ஏற்பட்ட பகையைத் தீர்த்துக்கொள்ளும் வகையில், சிருங்கேரி மடத்தைத் தாக்கி அழித்தது. இதைக்கேட்டு அதிர்ச்சியுற்ற திப்புசுல்தான் "மகிழ்ந்து கொண்டே செய்த இந்த பாபத்தின் பயனை அழுதுகொண்டே அனுபவிப்பார்கள்" என்று கூறி அனுதாபப்பட்டான். திப்புசுல்தானின் இந்த அனுதாப வார்த்தை ஹிந்து மன்னர்கள் கோபத்தை மேலும் கிளறிவிட்டது. அந்தக் காரணத்தால் தஞ்சாவூர் சிக்குடையார் ஸ்வாமிகளுக்கு தஞ்சாவூர்

மன்னரின் ஆதரவு ஏற்படத்தொடங்கியது. சரபோஜி மன்னன் தஞ்சாவூர் சிக்குடையார் ஸ்வாமிகளுககு சிருங்கேரி மடத்தின் சமான அந்தஸ்தைக் கொடுக்க விரும்பினுன். கி.பி. 1821ம் வருஷத்தில் கும்பகோணத்தில் ஒரு மடம் கட்டி அங்கு சிக்குடையாரை மடாதிபதியாக்கினுன். தஞ்சாவூர் ஜில்லாவிலிருந்த சிருங்கேரி மடம் தர்மாதிகாரியான அனந்தாவதானி என்பவர் அந்த சமயத்தில் சிருங்கேரி மடத்துக்கு காணிக்கைகள் வசூலிக்கும்போது, அதை கும்பகோணம் மடம் ஸ்வாமிகள் தடை செய்ததுடன், தஞ்சாவூர் மன்னரிடம் மனுக்கொடுத்து.காணிக்கைகளை சிருங்கேரி மடத்துக்கு அனுப்பக்கூடாது எனவும் கும்பகோணம் மடத்திற்கே செலுத்தவேண்டும்எனவும் உத்தரவு பெற்ருர். இதிலிருந்துதான் கும்பகோணம் மடத்துக்கு அந்தஸ்து உயர்ந்ததுடன் சோழ தேசத்தில் சிருங்கேரிக்கு ஏற்பட்டிருந்த ஆதரவு குறைய ஆரம்பித்தது. ஆனுலும் 9ம் நூற்ருண்டு முதல் 19ம் நூற்ருண்டு முடிய சிருங்கேரி மடத்துக்கு வேறூன்றிய செல்வாக்கை உடனேயே நீக்கி விடவும் முடியவில்லை. பெரும்பாலான மனுஷ்யர்களும் பண்டிதர்களும் 19ம் நூற்ருண்டு முடிவிலும் கூட சிருங்கேரியை ஆதரித்து வந்ததுடன், சிருங்கேரி மடத்தாரும், திருச்சி நேஷனல் ஹைஸ்கூல் (இப்போது நேஷனல் காலேஜ்) கும்பகோணம் நேடிவ் ஸ்கூல் முதலிய ஸ்தாபனங்களுக்கு உதவிப்பணம் அனுப்பியதாக வரலாறுகளும், ரிக்கார்டுகளும் உள்ளன. சரபோஜி மன்னருக்குப்பின் சிவாஜி மஹாராஜா காலத்தில் இம்மடத்துக்கு ராஜாவின் ஆதரவு மென்மேலும் பெருக ஆரம்பித்தது.

## (*iii*) கும்பகோண மடத்தார் காஞ்சியில் முதன் முதலாக பிரவேசம் செய்த வரலாறு

மைசூரில் 1805க்குப் பின் திப்புசுல்தான் தோல்வியடைந்து ஹிந்து மன்னர்கள் ஆட்சிக்கு வந்த போதிலும், சிருங்கேரி மடத்தின் பேரில் ஏற்பட்ட விரோத மனப்பான்மை, தஞ்சாவூர் மஹாராஷ்டிர மன்னருக்கும் குறையாமலிருந்ததுடன், தஞ்சாவூர் சிக்குடையார் ஸ்வாமிக்கும் சிருங்கேரி மடத்தில் சமான அந்தஸ்தை அடைய வேண்டுமென ஆசையும் மேலோங்கி வந்தது. அந்த அந்தஸ்து உருவாயின ஆங்கிலேயர்களுக்கு (கிழக்கு இந்திய கம்பெனியாருக்கு) சென்னை ராஜ்யத்தில் பல பாகங்கள் சேர்ந்தன. ஆற்காடு நவாபின் ராஜ்யம் வீழ்ச்சியடைந்தது. பிரெஞ்சுக்காரர்களின் செல்வாக்கும் குறைந்தது. தஞ்சாவூரின் கடைசி மன்னர்களான சரபோஜி, சிவாஜி இவர்கள் கிழக்கு இந்தியக் கம்பெனியாருடன் ஸ்நேஹிதம் செய்து கொண்ட முறையில் கம்பெனியாரிடம் மிக்க செல்வாக்குடன் இருந்து வந்தனர். கி.பி. 1837ம் வருஷத்தில் காஞ்சியில் காமாக்ஷியம்மன் கொவிலுக்குத் திருப்பணிகள் செய்து கும்பாபிஷேகம் செய்யும்படி ஏற்பாடாயிற்று. இதற்கு "கும்பகோணம் சங்கராச்சாரியாரை"

கிழக்கிந்தியக்கம்பெனியார் நியமித்தனர். இந்தக்கும்பாபிஷேகம் 1840ல் நிறைவேறிற்று. இதுதான் கும்பகோணம் சங்கராச்சாரியா ரான சந்திரசேகரர் 2க்கு காஞ்சியில் முதல் பிரவேசம். ஹொய்சால பிராம்மண வகுப்பைச் சேர்ந்த, தஞ்சாவூரில் குடியேறிய ஸன்யாஸி களுக்கு 18ம் நூற்றுண்டில் காஞ்சியில் வாசஸ்தானம் கூடக்கிடைய வே கிடையாது என்பது திண்ணம். இந்த முதல் பிரவேசத்தை ஸ்திரப் படுத்துவதற்குரிய கும்பாபிஷேகச் சிலையொன்று சான்றுகவும் உள்ளது. இந்த சம்பவம் நடந்த காலத்தில் "காஞ்சி காமகோடி பீடாதிபதி" என்ருவது "ஜகத்குரு" என்ருவது பெயர்கள் உருவாக வில்லை. 1840ம் வருஷத்திய கும்பாபிஷேகம் முடிந்தவுடன் இந்த மடத்து ஸ்வாமிகள் கும்பகோணத்துக்கே திரும்ப வந்துவிட்டார்" என்பதும் குறிப்பிடத்தக்கது. அடுத்தாற்போல கும்பகோணம் மடாதி பதி கிழக்கிந்தியக் கம்பெனியாருக்கு மனுச்செய்து, தஞ்சாவூரை ஆண்ட சிவாஜி மன்னருடைய சிபாரிசால், காஞ்சி காமாக்ஷியம்மன் கோவிலுக்கு பல நிபந்தனைகளுக்குட்பட்டு "TEMPORARY TRUSTEE" என்று 5—11—1842ம் தேதிய உத்தரவின் மூலம் நியமனம் பெற்ருர். இந்த உத்தரவிலும் "கும்பகோணம் மடாதிபதி" என்ற முகவரியையே கிழக்கிந்தியக் கம்பெனியார் குறிப்பிட்டிருக்கிருர்கள். "காஞ்சி காமகோடி பீடாதிபதி" என்றும் "ஜகத்குரு" என்ற பட்டங் களுடன் அன்று கும்பகோணம் ஸ்வாமிகள் மனுப்போடவுமில்லை. கிழக்கிந்தியக்கம்பெனியார் அந்த அந்தஸ்துகளை தங்கள் நியமன உத்தரவில் குறிப்பிடவுமில்லை தவிரவும் இந்த நியமன விஷயமாக பழையதர்மகர்த்தாவான ஒருவர் ஆக்ஷேபணை செய்துள்ள அப்பீல் களில் கீழ்க்கண்டவாசகம் காணப்படுகிறது:-"and one Sankarachariar was appointed to take the management — This individual is in no way connected with his church, is *an entire stranger to the country*, an *inhabitant of Cumbaconam* in the *Tanjore Zillah*, and is moreover a professor of a different creed, and has nothing to recommend him, but his wealth etc, etc,"

இந்த வாசகங்களிலிருந்து கும்பகோணம் சங்கராச்சாரியாருக்கு காஞ்சியில் முன் தொடர்பு இல்லையெனவும், பழைய தர்மகர்த்தாக் களைக்கூட அலக்ஷ்யம் செய்து கும்பகோணம் ஸ்வாமிகளுக்கு டிரஸ்டி பதவி கிடைத்தது, தஞ்சையை ஆண்ட சிவாஜி மஹாராஜாவின் செல் வாக்கினுல்தான் என்றும் ஊகிக்க இடமளிக்கிறது. இவ்வளவு ரிக் கார்டுகளையும் மறைத்து கும்பகோணம் ஸ்வாமிகள், காஞ்சியில் ஆதி சங்கரர் கி.மு 476ல் மடம் அமைத்தாரெனவும், அந்தப் பரம்பரையில் தாங்கள் வருவதாகவும் கூறிக்கொள்வது எவ்வளவு தூரம் உண்மை யென்பதை வாசகர்களே அறிந்துகொள்ளலாம். பல போலி தாம்ர

சாஸனங்களை படம் போட்டுக்காட்டி தங்களின் "காஞ்சி காமகோடி பரம்பரையை" ஸ்திரம் செய்வதற்கு பிரகடனம் செய்யும் ஸ்வாமிகள் 5—11—1842ம் தேதியில் காஞ்சீபுரம் காமாக்ஷியம்மன் கோவிலுக்கு "டெம்பரரி டிரஸ்டியாக" நியமனம் பெற்ற உத்தரவை ஆதி முதல் அந்தம் வரை நகலெடுத்து "படம் போட்டுக் காண்பிப்பதுதான் நேர்மையாகும்" என்பதைக் குறிப்பிட்டுக் காண்பிக்கப்படுகிறது. இந்த நியமனம் பெற்ற பின்னரே 1814 — 1851 வருடங்களிலிருந்த சந்திர சேகரர்—2 ஸ்வாமிகளால் "காஞ்சி காமகோடி பீடாதிபதி" — "ஜகத்குரு" — "மற்ற நான்கு ஆம்னாய பீடாதிபதிகளும் இவருக்கு உட்பட்ட சாதாரண 'குருக்கள்' —" என்ற கற்பனை தொடங்கப்பட்டன. 5—11 1842ம் தேதிக்கு முன் மேற்காட்டிய அந்தஸ்து வாய்ந்த பட்டப் பெயர்களை அக்காலத்திலுள்ள நமது முன்னோர்கள் கேள்விப்பட்டதே கிடையாது. அனைவரும் சிருங்கேரி சிஷ்யர்களாகவே இருந்தார்கள். தஞ்சாவூரிலேயே சிருங்கேரி மடத்தின் தர்பாதிகாரி இருந்தார் என்பதை முன்பே குறிப்பிட்டிருக்கிறோம். 19ம் நூற்றுண்டிலும் சோழ தேசத்திலிருந்த பல பண்டிதர்கள் சிருங்கேரி மடத்தில் சாஸ்திரங்கள் கற்றவர்களாகவும், அந்த மடத்தின் பண்டிதர்களாகவும் விளங்கி வந்தது யாவரும் அறிந்த உண்மை. காசியிலிருக்கும் ராஜேஸ்வர சாஸ்திரியளின் மாதாமஹர் பங்களூர் சதகோடி ராம சாஸ்திரியளிடம் (ஸ்ரீ ஸச்சிதானந்த சிவாபி நவ நரசிம்ம பாரதீ ஸ்வாமிகளின் பூர்வாஸ்ரம பிதா) சாஸ்திரங்கள் பயின்றவர். நடுக்காவேரி ஸ்ரீநிவாஸ சாஸ்திரியள் ஸ்ரீ ஸச்சிதானந்த சிவாபிநவ நரசிம்ம பாரதீ ஸ்வாமிகளிடம் கல்வி பயின்றும், சிருங்கேரி மடம் பண்டிதராகவுமிருந்தார். காலடியில் ஸ்ரீ சங்கராலயத்தை ஸ்தாபித்த விஷயத்தில் ஸ்ரீ ஸ்வாமிகளின் திட்டங்களைப் பூராவும் நிர்வஹித்தவர் இந்த ஸ்ரீநிவாஸ சாஸ்திரியளே ஆவர். நடுக்காவேரி பட்டம் ஸ்ரீ நாராயண சாஸ்திரியள் சிருங்கேரி மடம் பண்டிதராக விளங்கியவர். பைங்காநாடு கணபதி சாஸ்திரியள் சிருங்கேரி மடம் பண்டிதரும் சிஷ்யரும் ஆவாரென்பதற்கு அவருடைய காவ்யங்களே அத்தாக்ஷியாக உள்ளன. மஹாதானபுரத்திலிருந்த ஸ்ரீ பாஷ்யம் ஸ்வாமிகள் சிருங்கேரியில் ஸ்ரீ சந்திரசேகர பாரதீ ஸ்வாமிகளிடத்தில் சாஸ்திரம் வாசித்தவர். கிருஷ்ணராயபுரத்தில் வசித்துவரும் அக்னி ஹோத்ரி ஸ்ரீ சங்கர தீக்ஷிதர் காலடியிலும், சிருங்கேரியிலும் சாஸ்திரங்கள் கற்று இன்றும் சிருங்கேரி மடம் பண்டிதராகவே விளங்கி வருகிறார். தற்சமயம் பங்களூரில் வசிக்கும் வித்யாநிதி ஸ்ரீ ராமச்சந்திர சாஸ்திரியள் சோழ தேசத்தைச் சேர்ந்தவர் என்பதும் சிருங்கேரி மடத்தில் பிரதான பண்டிதரென்பதும் யாவரும் அறிவர். பிராந்தியம் கரை ஸ்ரீ சாஸ்திரியள் சிருங்கேரி வித்யாலயத்தில் சாஸ்திரம் கற்றவர். இன்னும் பல பேர்களைக் கூறிக்கொண்டே போனால் பெருகும் என்பதற்காக இத்துடன் நிறுத்திக்கொள்ளப்படுகிறது.

முன்பும், இன்றும், என்றும் சிருங்கேரிதான் ஞானச் சுடராக விளங்கி வருகிறது என்பதும், ஸ்ரீ சாரதாம்பாளே ஸ்ரீ ஜகத்குருக்களாக விளங்கி வருகிருள் என்பதும் காசி முதல் கன்னியாகுமரி வரையிலுள்ள பண்டித உலகமறிந்த உண்மை. வித்வான் என்ற அந்தஸ்து உள்ள யாவருமே பிரதி வருஷமும் விநாயகசதுர்த்தி முதல் அடுத்து வரும் பௌர்ணமி வரை சுமார் 12 தினங்களுக்கு, சிருங்கேரி ஆசார்யாளால் நிர்வகிக்கப்பட்டுவரும் "கணபதி வாக்யார்த்த சதஸை" நேரில் பார்த்து அனுபவித்தால், சிருங்கேரியில்தான் ஞானப்பெருக்கு அருளோடு ஓடிக்கொண்டிருக்கிறது என்று கண்டு கொள்ளலாம். ஆக சிருங்கேரிதான் ஆதிசங்கரரால் பிரதிஷ்டையடைந்த "தக்ஷிணம்ஞயபீடம்" என்பதும், தக்ஷிண தேசத்திலுள்ள (தமிழ்நாடு உட்பட) நம்மனைவரும் சிருங்கேரி மடம் சிஷ்யர்களாகவே இருந்தோம் என்பதும் மிகத்தெளிவு தக்ஷிண தேசத்தவர்களுக்கு சிருங்கேரி ஜகத்குருக்களே தலைவர் ஆவார். கி.பி.1894ம் வருஷம் முதல் தென்னாட்டிலும், அதிலும் விசேஷமாக சோழ தேசத்தில் ஸஞ்சாரம் செய்த சிருங்கேரி ஆசார்யாள் ஸ்ரீ ஸச்சிதானந்த சிவாபிநவ நரசிம்ம பாரதீ ஸ்வாமிகள், சோழ நாட்டிலிருந்த பல பிரமுகர்களின் கோரிக்கையின் பேரில் திருச்சிராப்பள்ளியில் அத்வைத சபையை ஸ்தாபித்தார்கள். கும்பகோணத்திலும் அத்வைத சபையை ஸ்தாபித்ததுடன், ஸ்ரீ சாம்பசிவய்யர் என்ற பிரமுகரின் ஏற்பாட்டின்படி அத்வைத ஸித்தி, ஸித்தாந்த பிந்து முதலிய அத்வைத கிரந்தங்கள் சிருங்கேரி ஜகத்குரு அவர்களின் ஸ்ரீமுகத்தைப் பெற்று கும்பகோணம் அச்சாபீஸிலேயே அச்சிடப்பட்டு இன்றும் விளங்கி வருகின்றன. அந்த சமயம் "காஞ்சி காமகோடி பீடாதிபதி" எங்கிருந்தார் — என்ன செய்து கொண்டிருந்தார் என்பதை வாசகர்கள் ஊகித்து அறியவேண்டும். சமீப காலத்தில்தான் மேற்படி புஸ்தகங்களிலுள்ள, சிருங்கேரி ஸ்வாமிகளின் ஸ்ரீ முகம், முகவுரை முதலியன இருப்பதை ஸஹிக்காமல் மேற்படி லைப்ரரியிலுள்ள புஸ்தகங்களில் மட்டும், அவைகள் கிழிக்கப்பட்டன என்று பராபரியாக வதந்தி வந்திருக்கிறது ஆனாலும் மேற்படி புஸ்தகங்கள் ஷை ஸ்ரீ முகம், முகவுரையுடன் மதுரையில் காப்பாற்றப்பட்டு வருகின்றன இந்தப் புஸ்தகத்தின் முகவுரையில் ஆதிசங்கரர் ஸ்தாபித்தது நான்கு மடங்கள். அவற்றுள் சிருங்கேரிதான் தக்ஷிணம்ஞய பீடம் என்று ஸ்பஷ்டமாகக் காட்டப்பட்டுள்ளது.

### (iv) கல்பனு மடாம்நாயம் முதலியன தோன்றுதல்

காமாக்ஷியம்மன் கோவில் டிரஸ்டியாக நியமிக்கப்பட்ட கும்பகோணம் ஸ்வாமிகளுக்கு சிவாஜி மன்னரின் ஆதரவும் பண உதவியும் ஏற்படவே, நான்கு ஆம்நாய பீடாதிபதிகளுக்கும் மேல்பட்ட அந்தஸ்து (கல்பனு காஞ்சி காமகோடி பீடத்துக்கு) இருப்பது போல பல கல்பனு கிரந்தங்கள் உருவாக்கப்பட்டன. காஞ்சியில் ஆதிசங்கரர்

ஓர் ஜகத்குரு பீடம் ஏற்படுத்தினர் என்று ஜோடனை செய்தால்; இதற்கு ஒரு சரித்ரம் வேண்டும்; மடாம்நாயம் வேண்டும்; குரு பரம்பரை வேண்டும்; பூஜையிலுள்ள சிவலிங்கத்துக்குப் பெருமை வேண்டும்; இவ்வளவையும் கல்பிப்பதற்கு பண்டிதர்களின் ஸஹாயமிருந்தால்தான் நடைபெறும். காஞ்சியில் ஆதிசங்கரர் "ஸித்தி பெற்றார்' என்று ஒரு ஸ்லோகம் சிவரஹஸ்யத்திலுள்ளது. இதை ஆதாரமாகக் கொண்டு ஓர் மடமும் காஞ்சியில் உருவானது என்று கல்பிப்பது சிரமமேயில்லை. இவ்விரண்டு அம்சங்களையும் சேர்த்து இணைத்து ஒரு நூதன சங்கர விஜயம் இயற்றுவதற்கு ஆதிசங்கரருடைய சாக்ஷாத் சிஷ்யர் என்று சொல்லிக்கொண்டு "ஓர் அனந்தானந்த கிரி" 1843ம் ஆண்டில் ஸ்ரீ சந்திரசேகர இந்திர சரஸ்வதி 2 முன்வந்து தோன்றினர்! ஏடுகள் தயாரிக்கப்பட்டன. பல லைப்ரரிகளுக்கும் சென்றன. ஆனல் ஆதிசங்கரரின் பிறந்த இடம், தாயார், தகப்பனர் பெயர்கள் சரியானபடி இல்லை. மற்றோர் ஆசாமி இவ்விஷயங்களை திருத்தி பரிஷ்காரம் செய்து கொடுத்தார். அதிலும் யோகலிங்கத்தைக் காட்டவில்லையென்ற குறையேற்பட்டது. இதற்கு ஓர் ஆசாமி வந்து கைலாசத்தில் சங்கரர் ஐந்து லிங்கங்கள் ஈஸ்வரரிடமிருந்து அடைந்ததாகவும், அவற்றை ஆங்காங்கு பிரதிஷ்டை செய்ததாகவும் பல இடங்களில் கதையை நுழைத்துக் கொடுத்து ஏடுகள் தயாரித்துவிட்டார். சிருங்கேரியில் ஸுரேஸ்வரரை நியமித்தது கும்பகோணமடத்தாருக்கு அனுகூலமாகத் தெரியவில்லை. மற்றோர் ஆசாமி தோன்றி வந்து மாறுதல்கள் செய்ததில் பத்மபாதர் சிருங்கேரிக்கு நியமிக்கப்பட்டதாகவும், காஞ்சியில் ஸுரேஸ்வரர் நியமிக்கப்பட்டதாகவும் ஒட்டவைத்து ஏடுகள் தயார் செய்து கொடுத்துவிட்டார். இவ்விதம் கட்டத்துக்குக் கட்டம், காலத்துக்கு காலம் உகந்தவாறும் தங்கள் மடத்துக்கு உகந்தவாறும் பல பேர்வழிகயால் உருவாக்கப்பட்ட "அனந்தானந்தகிரி சங்கரவிஜயம்'' முன்னம் தஞ்சாவூர் ஜில்லா ஜட்ஜ் Dr. பர்னல் உட்பட பல பேர்களால் மறுப்புகள் தெரிவிக்கப்பட்டு உளுத்தும் போய் விட்டது. உளுத்துப்போன கட்டைக்குப் பூண் போட்டாற்போல இந்த சங்கரவிஜயத்தை Dr. மஹாதேவனுடைய முகவுரையுடனும் Dr. வீழிநாதனுடைய குறிப்புகளுடனும் மதராஸ் யுனிவர்ஸிடியாரின் வெளியீடாக 1971ல் வெளி வந்தது. இந்த புஸ்தகத்துக்கு மைசூர் யுனிவர்ஸிடியைச் சார்ந்த ஓர் புரொபஸர் மறுப்புத் தெரிவித்ததுடன், M.A., Ph.D., முதலிய பட்ட யோக்தையில்லாத Doctor என்ற பட்டம் பெருத ஒரு மதுரை பிரமுகருக்கும் தனது மறுப்பைத் தெரிவித்தார். இந்த இரண்டு மறுப்புகளுக்கும் பதில் கூற இயலாத நிலையில் மேற்படி அனந்தானந்தகிரி சங்கரவிஜயம் படுதோல்வியடைந்தது. மேலும் இதே சமயத்தில் ஒரு வியாஸாசலர் தோன்றினர். அவருக்கும் ஓர் அவகாசம் கொடுக்கப்பட்டது, அவரும் வியாஸாசலீ

யம் என்ற சங்கர விஜயத்தை இயற்றி ஏடுகளைப் பதிப்பித்தனர். மாதவீய சங்கரவிஜய ஸ்லோகங்களையே பெரும்பாலும் எடுத்துக் கொண்டு முன் பின் மாறுதலாக அமைத்தும், உபமன்யு சரித்ரத்தை விஸ்தாரமாகக் கூறியும், ஆசார்யாளுக்கு ஏற்பட்ட பகந்தர வியாதியை குணப்படுத்த வைத்யர்களை அழைத்து வரச்சென்ற சிஷ்யர்கள், வழியில்பல உத்ஸாஹமான காக்ஷிகளான ஜலக்ரீடை, ஸுராபானம், காமகேளிக்கைகளைப் பார்த்துக்கொண்டே சென்றூர்கள் என்ற வர்ணனையும், இன்னும்பல விஷயங்களைப்புகுத்தி இந்த சங்கரவிஜயம் இயற்றப்பட்டுள்ளது. இந்த ஏட்டைபுஸ்தகரூபமாக 1954ம் வருஷத்தில் Madras Manuscripts Libraryயில் உத்யோகம் வகித்த ஸ்ரீ T. சந்திரசேகரன் அச்சிட்டு உதவினர். இதில் ஓர் ஸ்வாரஸ்யமென்னவென்ருல், ஏட்டிலுள்ளபடி அச்சிட்டு முடிந்த பின்னர், ஏட்டிலில்லாத சில குறைவுகளைச் சேர்க்க வேணுமென்று சில ஸ்லோகங்களை போலகம் ராம சாஸ்திரியன் கொடுத்ததும், புஸ்தகம் முடிந்த பின்னரே இந்த ஸ்லோகங்கள் கிடைத்தபடியால், இந்த ஸ்லோகங்களை புஸ்தகத்திலேயே சேர்க்க இயலாமல், தனது முகவுரையின் முடிவில் ஸ்ரீ T.சந்திரசேகரன் காட்டியிருப்பதும் கவனிக்கத்தக்கது. இன்னும் இதேபோல பல பேர்வழிகள் தோன்றி "மார்க்கண்டேய ஸம்ஹிதை" என்று பூமண்டலத்திலேயே இல்லாத ஒரு புஸ்தகத்திலுள்ளது போல சில ஸ்லோகங்களை கல்பித்தும் "சங்கராப்யுதயம்" "பதஞ்சலி சரித்ரம்" முதலான கிரந்தங்களும் அவற்றுள் காஞ்சியில் ஆதிசங்கரர் ஸித்தியடைந்தார். மடத்தை ஏற்படுத்தினூர் என்ற கதைகளை கல்பித்து உதவி புரிந்தனர். இதுவும் போதாதே. ஆதிசங்கரர் முதல் ஒரு குரு பரம்பரை வேண்டுமே? இதற்கு 18ம் நூற்ருண்டில் நெரூரில் ஸித்தியடைந்த ஜீவன்முக்தரான சதாசிவ பிரம்மேந்திராள் தோன்றினூர். தான் 1539 முதல் 1586ம் வருஷம் வரையில் "காமகோடி பீட" பரம்பரையிலிருந்த பரமசிவேந்திரரின் சிஷ்யரெனக் கூறிக்கொண்டு கி.பி. 1843ம் வருஷத்தில் சந்திரசேகர சரஸ்வதி 2 முன் தோன்றினூர். இவருக்கு குரு பரம்பரை தயாரிக்கும் பணி கொடுக்கப்பட்டது. ஜீவன் முக்தராயிருந்து அஷ்டமாஸித்திகளையும் பெற்றவரல்லவா சதாசிவ பிரம்மேந்திராள்! ஞானதிருஷ்டியாலறிந்து "குரு ரத்னமாலா" என்ற ஓர் கிரந்தத்தை இயற்றிக் கொடுத்தார்.

## (v) சதாசிவ ப்ரம்மேந்திராள் தான் குருரத்னமாலாவை இயற்றியவரா?

சதாசிவ ப்ரம்ஹம் என்று பிரசித்தியடைந்திருக்கும் சதாசிவேந்த்ரருடைய குரு பரமசிவேந்திரர் இம்மடத்து 55வது ஆசார்யர் என்கிருர்கள். அப்படியிருந்தால் அவருடைய குரு புண்ய ஸ்லோக மஞ்ஜரீ எழுதினதாகச் சொல்லும் ஸர்வக்ஞஸதாசிவ போதேந்திரராக இருக்க வேண்டும். ஆனல் பரமசிவேந்திரர் எழுதியிருக்கும் தஹர வித்யா பிர

காசிகையிலும்; சிவ்கீதா வியாக்யானத்திலும் தன் குரு அபிநவ நாராயணேந்திர ஸரஸ்வதி என்று குறிப்பிடுகிருர். இவர் கும்பகோண மட பரம்பரையில் இல்லையென்பதில் சந்தேகமில்லை. மேலும் இந்த பரமசிவேந்திரர் அம்மடத்தில் 1539 முதல் 1586 வரை இருந்ததாகச் சொல்கிருர்கள். அவருடைய சிஷ்யராகச் சொல்லப்படும் ஸதாசிவேந்திரர் 1729 முதல் 1736 வரை தஞ்சாவூரில் அரசாண்ட துலஜாஜி மஹாராஜருக்கும், 1758 முதல் 1798 வரை திருவாங்கூரில் அரசாண்ட கார்த்திகை திருநாளுக்கும்; புதுக்கோட்டையில் 1730 முதல் 1769 வரை அரசுபுரிந்த விஜயரகுநாத தொண்டைமானுக்கும் ஸமகாலத்தவர். மேலும் அவருடன் கூட வித்யாப்யாஸம் செய்த கோபால கிருஷ்ண சாஸ்திரி என்பவர் புதுக்கோட்டை சமஸ்தானத்தில் ராஜ குருவாக இருந்து 1739ல் சில கிராமங்களை சாஸனம் பெற்றிருக்கிருர். இது தவிர பரமசிவேந்திரரே தஹரவித்யா பிரகாசிகையை எழுதினது த்ரயம்பக மகியின் வேண்டுகோளின் பேரில் எழுதியதாகச் சொல்கிருர். இந்த த்ரயம்பக மஹி பால்யத்திலேயே தஞ்சாவூர் ஸஹாஜி (1684 —1711) மஹாராஜரிடமும் பின்னுல் சரபோஜி (1711 — 1728) மஹாராஜரிடமும் மந்திரிபதவி வஹித்தவர். இவர் ஸ்ரீமத் ராமாயணத்துக்கு "தர்மாகூதம்" என்ற ஒரு அத்புதமான வியாக்யானத்தை எழுதி அதை 1719 அக்டோபரில் முடித்திருக்கிருர். அதன் பின்னர் 1750 வரை ஜீவித்திருந்ததாகவும் தெரிகிறது. ஆகையால் பரமசிவேந்திரர் நிச்சயமாக 18வது நூற்ருண்டில்தான் இருந்தவரென்று சந்தேகமன்னியில் தெரிகிறது. 1586லேயே ஸித்தியடைந்து விட்டதாகச் சொல்லும் கும்பகோண மடம் ஆசார்யராக இருந்திருக்க முடியாதென்பது ஸித்தம். இதே காரணங்களிலும் ஸதாஸிவேந்திரர், குருரத்னமாலிகையை எழுதியிருக்க முடியாதென்பதும் தெளிவாகிறது. கும்பகோண மடம் பரமசிவேந்திரருக்கு சிஷ்யராயிருந்து அவருக்குப்பின் வந்த விசுவாதிகர் என்ற ஆத்மபோதருடைய வேண்டுதலின்மேல் அதை எழுதியதாகச் சொல்கிருர்கள். அந்த விசுவாதிகருடைய பீடாதிபத்ய காலம் 1586 முதல் 1638 வரை என்றும் சொல்வதால் 18வது நூற்ருண்டில் ஜீவியவந்தராகயிருந்த ஸதாஸிவ ப்ரம்மேந்திராள் எழுதியிருக்க முடியாதென்பதில் சந்தேகம் இல்லை. இவர் மகாசித்த புருஷராயிருந்தபடியால் ஏன் 16வது நூற்ருண்டிலிருந்து 18வது நூற்ருண்டு வரை இருந்திருக்க முடியாதென்கிருர் ஒருவர். அவர் இன்றுகூட இருக்கலாம். ஆனுல் அவருடைய பால்ய ஸ்நேகிதர் கோபாலகிருஷ்ண சாஸ்திரி 1739ல்தான் சாஸனம் வாங்கியிருக்கிருரே? அவருமா 16 முதல் 18வது நூற்ருண்டு வரை இருந்தார்? அவரும் ஸித்தபுருஷரா? ஸித்தபுருஷராயிருந்தால் தான சாஸனம் எதற்கு? ஆகையால் ஸதாசிவேந்திரர் குருரத்னமாலிகை எழுதினதாகச் சொல்வதும், அவருடைய குரு பரமசிவேந்திரர் இம்மடத்தில்

இருந்ததாகச் சொல்வதும் கொஞ்சமேனும் வாஸ்தவமில்லையென்று மிக நன்ருகத் தெரிகிறது. கும்பகோண மடம்அபிமானி Dr. T M.P. மகாதேவன்கூட தன் ஆராய்ச்சியின் மூலம் இந்த குருரத்னமாலா என்ற புஸ்தகம் ஸதாசிவ பிரம்மேந்திராள் எழுதியதில்லையென பல சான்றுகளுடன் திட்டவட்டமாகக் கூறியுள்ளார். (Goudapada — பக்கம் 12) Goudapada என்றபுஸ்தகத்தில் காணும் இந்த ஆராய்ச்சி வருங்காலத்தில் திருத்தியமைக்கப் படமாட்டாது என நம்பப்படுகிறது. குருரத்னமாலா எழுதப்பட்டவுடன் பழையகுரு எனகல்பிக்கப்பட்ட ஒரு ஆத்மபோதர் ஸுஷமா என்ற வியாக்யானத்தை எழுதிக்கொடுத்து உதவினர். (குருரத்னமாலாவில் கூறப்பட்ட குருக்களின் ஸமாதி ஸ்தலங்கள் எங்கே இருக்கின்றன என்ற விஷயமாக கும்பகோண மடத்தார் ஆராய்ச்சி செய்து கொண்டு இருக்கின்ருர்கள்)

மடாம்நாயம் வேண்டுமென்ற யோசனை பிறந்தது. சித்ஸுகர் என்று தன்னைக் கூறிக்கொண்டு ஒரு ஆசாமி ஒரு மடாம்நாய சேது வை உருவாக்கித் தந்தார். வேதம் 5; மடங்கள் 5;. மஹாவாக்யங்கள் 5; ஓம். தத். ஸத். என்பது கும்பகோண மடத்தாரின் மஹாவாக்யம். இவ்விதம் ஒரு மடாம்நாய சேது 1843ல் தோன்றிய சித்ஸுகரால் தயாரித்துக் கொடுக்கப்பட்டது. (அனுபந்தம் 4ஐப் பார்க்கவும்) ஓம். தத்.ஸத் என்பது உங்கள் மடத்துக்கு மஹாவாக்யமா? இந்த வாக்யம் உங்கள் மடத்துக்கு வேதமாக அமைத்துக்கொண்ட ரிக்வேதமாக அமைத்துக்கொண்ட ரிக்வேதத்தில் எவ்விடத்தில் இருக்கிறது? என்ற கேள்விக்கு இதுவரை ஸமாதானம் கூற மாட்டாமல் பழைய பெரிய வாளும் புதுப்பெரியவாளும் எங்கள் மஹாவாக்யமல்ல என்று கையை விரித்துவிட்டார்கள். "ஆக அம்மடத்தாரின் மடாம்நாய சேதுவே, இப்பொழுது அம்மடம் ஸ்வாமிகளாலேயே கைவிடப்படுகிறது என்று தீர்மானமாகிறது". நிற்க மற்ருேர் குரு தோன்றி புண்யஸ்லோக மஞ்ஜரீ என்ற கிரந்தத்தையும் 19ம் நூற்ருண்டிலேயே தயார் செய்து கொடுத்தார். இவ்வளவு அடிப்படைகள் ஏற்பட்டபின் ஏதோ சில தாம்ர சாஸனங்களும் கிடைத்து மடத்தின் பிராசீனத் தன்மைக்கு உதவின. இந்த "போலி" தாம்ர சாஸனங்கள் கும்பகோணம் (காஞ்சி) மடத்தைச் சார்ந்தவை என்பதற்கு ஸ்ரீ N. ராமேசன் முதலிய ஆராய்ச்சியாளர்கள் உதவினர். ஆக காஞ்சீபுரத்தில் கி பி 1843க்குப் பிறகு கல்பிக்கப்பட்ட மடம்; ஆதிசங்கரால் முன்னமே (கி.மு.விலேயே) பிரதிஷ்டையடைந்ததுபோல "காமகோடி பீடம்"பிரதிஷ்டையடைந் தது.

## (iv) காஞ்சீபுரத்திலுள்ள மடம் ஆதி சங்கரராலேயே கி.மு.வில் ஸ்தாபிக்கப்பட்டதா? தாம்ரசாஸனம் கூறுவது உண்மையா?

திரு ராஜகோபால சர்மா அவர்கள் கும்பகோண மடம் புதுப் பெரி

யவர்களுக்கு 14—10—1971 அன்று எழுதியுள்ள கேள்வி, பதில் ரூபமான ஒரு கடிதம் எழுதி அதையே "Satyanvshana" என்ற புஸ்தகமாக வெளியிட்டிருக்கிறார். அதில் 30ம் பக்கம் கீழ்க்கண்டபடி குறிப்பிட்டிருக்கிறது. கேள்வி: Mr T.A. Gopinatha Rao, acting on your orders wrote a book on your Mutt in 1916, basing it on 10 copper inscriptions of your Mutt. The plate says that your Mutt came to existence from 13th century in Kanchi. Based on the same ten copper plates, evidence is adduced now that your Mutt existed from 1111 A.D. பதில்: Copper plate 1. G.O. Madras Govt. No. 1260. Public 25—8—1915 says, it belongs to the 13th century A.D. and mentions the teacher Shankararya. It is not clearly stated in the record if the Matha presided over Shankararya, herein referred to, was identical with Shankaracharya Matha at Conjeevaram. Sri T.A.G. Rao writes "It is only at a comparitively later period, a new Matha seems to have been erected in Shiva Kanchi. You assert that your Mutt is near Kamakshi Mandir. According to your Matamnaya Sethu Kanchi Mutt is in Vishnu Kanchi. The propaganda pamphlets say Shiva Kanchi. Of these three which is the true one? The Vishnu Kanchi Mutt is of recent times. *Its old Survey No. is 620-4/y.* In Government records it is mentioned as Government site. *It was Government land both in Nawab's time and in East India Company's time.* In the same way the survey No. of Shiva Kanchi Mutt site is, according to old survey records, *Survey No.925.* In Government records, it is written as "*Inam dry land*" Even here the Mutt's name is not mentioned. On the strength of these records, these two Mutts are of recent origin. There is no Mutt in Kamakshi Mandir or adjoining the same. There were no Mutts here in ancient times. The Mutt heads became trustees of Kamakshi Mandir in Nov. 1842. Before that all these were in Government hands. Before that time the temple was in the hands of local trustees. There is not a whisper of Kanchi Peeta or Mutt in any stone edicts found in and around the temple. The official of Archaeological dept. Sri H.K.S. says "The details of date given in lines 4 to 7 do not work correctly either for A.D. 1291 or for A.D. 1292; but in the cyclic year in A.D. 1351. So the period of this epigraph not belonging to the Mutt; is A.D. 1351 and not 1291. The receiver is described as Dwijanmane; and the Vanshais described as Poppili. The heads of Mutt are Sanyasins. Hence the *Archaeology dept holds that the epigraph is not of K. Mutt.*

இதிலிருந்து கும்பகோண மடத்தார் தங்களுக்கு ஆதரவாகக் கூறும் தாமிர சாஸனத்தை அரசாங்கத்தின் தொல் பொருள் இலாகாவே அது காஞ்சி மடத்துக்கு உரியதில்லையென மறுத்துக்கூறியிருப்பதையும், கி.மு. விலேயே ஆதிசங்கரரால் ஸ்தாபிக்கப்பட்டதாக அவர்கள் கூறும் மடங்கள் 19ம் நூற்றுண்டில்கூட காலி இடமாக இருந்தது என்பதையும் வாசகர்கள் தெரிந்து கொள்ளலாம். இவ்விடத்தில் மற்றேர் விஷயமும் கூற விரும்புகிறேம். அதே காஞ்சீபுரத்தில் புராதனமாகவே கி.பி. 1800க்கும் முன்னரே (கர்நாடக யுத்த காலத்துக்கும் முன்னரே) சிருங்கேரி மடத்தைச்சேர்ந்த ஓர் மடம் பழைய காலத்துக் கட்டடமாக இன்றும் விளங்கி வருகிறது. ஆனுல் கும்பகோணம் மடத்தாருக்கு தற்சமயம்தான் நூதனமாக இடம் கிடைத்து சமீப காலத்தில் மடம் கட்டப்பட்டது என்பது யாவரும் அறிந்ததே. இதேபோலே மதுரையிலும் அம்மன் சன்னதி தெருவில் சுமார் 500 வருஷங்களுக்கும் முன்னதாக புராதனமான சிருங்கேரிமட கட்டடம் விளங்கி வருகிறது. ஆனுல் சுமார் 8 வருஷங்களுக்கு முன் வரை கும்பகோண மடத்தாருக்கு மதுரையில் மடம் இல்லாமலிருந்து தற்சமயம்தான் "பகவத் பாதுகா மண்டபம்" என்ற பெயரில் ஒரு கட்டடம் எழுப்பப்பட்டுள்ளது. (இதுவும் மடமாக உபயோகப்படுத்த லாயக்கில்லாமல் சிராத்தம் செய்பவர்களுக்கு இட வசதியாக சிராத்தம் செய்ய அனுமதிக்கப்படுகிறது) இதே போல ராமேஸ்வரத்திலும் ஸ்ரீ ராமனுத ஸ்வாமி கோவிலின் கிழக்கு பிரகாரத்தை ஒட்டி மிக பிராசீனமாக சிருங்கேரி மடத்தின் கட்டடமும், சங்கராலயமும் இருந்து வருகிறது. இந்த இடத்தில் தான் ஆதிசங்கரர் ராமேஸ்வரம் வந்திருந்த காலத்தில் தங்கியிருந்ததாகவும், வாத பிரதிவாதங்களால் அன்னிய மதஸ்தர்களை ஜயித்ததாகவும், அதன் நிமித்தமாகவே இவ்விடத்தில் மடம் கட்டப்பட்டு, சிருங்கேரிமடத்தின் பராமரிப்பிலிருந்து வருவதாயும் தெரியவருகிறது. கட்டடம் கோவிலை ஒட்டியே இருப்பதன் மூலம் ராமேஸ்வர க்ஷேத்ரம் சிருங்கேரி மடத்தைச் சேர்ந்தது என திட்டவட்டமாக நிச்சயமாகிறது. ஆனுல் மிக சமீபகாலத்தில் சமுத்ரக்கரையை ஒட்டி, கும்பகோண மடத்தாரால் நூதனமாகக் கட்டப்பட்ட மடத்திற்கு 1963ம் வருஷத்தில்தான் நூதன பிரவேசமென்பதை "காமகோடி பிரதீபமே" கூறியுள்ளது. இதை யாவரும் அறிவார்கள். இந்த கும்பகோண மடத்தாரின் மடம் கோவிலுக்கு எந்த விதத்திலும் சம்பந்தமில்லையென யாவருக்கும் தெரியும். ஆனுல் ராமேஸ்வரத்தில் நடைபெறும் சங்கரஜயந்தி உத்ஸவ காலத்தில் சங்கரரை ஊர்வலமாக எழுந்தருளப் பண்ண, சிருங்கேரி மடத்திற்கு, ஸ்ரீ ராமனுத ஸ்வாமி கோவிலிலிருந்து பல்லக்கு, பிருதுகள், குடைகள் முதலியன அனுப்பப்படுவதை பிரதி வருஷமும் யாவரும் பார்க்கலாம். மேலும் ஸ்ரீ ராமனுத ஸ்வாமி கோவிலில் பூஜை செய்யும் அர்ச்சகர்கள், ஸ்தானீகர்கள், சிருங்கேரி ஜகத்

குருவிடமிருந்து தீக்ஷா நியமம் பெற்றவர்களாக இருக்கவேண்டுமென் பதும் ஸம்பிரதாயத்தில் இருந்து வருகிறது. ஆக கும்பகோணத்தில் 1821ம் வருஷத்தில் தஞ்சையை ஆண்ட சரபோஜி மன்னரால் கட்டிக் கொடுக்கப்பட்ட கட்டடம் ஒன்றுதான் கும்பகோண மடத்திற்கு புராதனம் என்று சொல்லிக் கொள்ளலாமே தவிர வேறு கட்டடங்கள் கிடையாது. கும்பகோண மடத்தார் இப்பொழுதுள்ள ஸ்வாமிகளான சந்திரசேகரேந்திர சரஸ்வதீ —4 அவர்கள் காலத்தில்தான், அவருடைய செல்வாக்கினுல் 20ம் நூற்ருண்டு மத்தியில் பல கட்டடங்கள் எழுப்பினுர்கள் என்பது மிகவும் தெளிவு.

## *VII* தாடங்க பிரதிஷ்டை

நிற்க, சந்திரசேகரர் 2 அவர்கள் காலத்துக்கு மறுபடியும் போவோம். காஞ்சியில் "காமகோடி பீடம்" சந்திரசேகரர் 2ஆல் ஆரம்பமாகும் சமயம், திருச்சி ஜில்லாவிலுள்ள திருவானைக்காவல் கோவில் அகிலாண்டேஸ்வரி அம்மனுக்கு தாடங்க பிரதிஷ்டை செய்து வைக்கும் விஷயத்தில் கும்பகோணம் மடத்தாரின் ஆக்ரமிப்பை நிவர்த்தி செய்ய 1844ம் ஹூத்தில் கோர்ட்டில் ஒரு வழக்கு ஏற்பட்டது. இதுசமயம் சிருங்கேரி மடத்தில் பல அசௌகரியங்கள் (1) சிருங்கேரி ஜகத்குரு நிஜாம் ராஜ்யமான ஹைதராபாத்தில் விஜய யாத்திரையாக இருந்தார். (2) கார் வசதியில்லாத அக்காலத்தில் சிருங்கேரியிலிருந்து முன் ரிக்கார்டுகளை வரவழைத்து கோர்ட்டுக்கு ஆஜர் செய்ய முடியாத நிலை. (3) கும்பகோண மடத்துக்கு சோழ தேசத்தில் நூதனமாக வளர்ந்துவரும் செல்வாக்கு. (4) கோர்ட்டாருக்கு வழக்கை சீக்கிரம் முடிக்கவேண்டுமென்ற கருத்து. (5) சிருங்கேரி மடத்து கேஸை நடத்துகிறவர் கோர்ட்டில் "கும்பகோணம் ஸ்வாமிகள்" காஞ்சி காமகோடி பீடாதிபதியல்ல. ஆனுல் சிக்குடையார் என்ற அந்தஸ்திலிருப்பவர் என்னும் விஷயத்தை தெரிவிக்க விட்டுவிட்டது. இவ்வித அசௌகரியங்களால் வழக்கை சரியாக நடத்த இயலவில்லை. ஆனுலும் கோர்ட்டாரின் தீர்ப்பில் சிருங்கேரியிலிருந்து கேஸை நிரூபணம் செய்யத்தக்க ரிக்கார்டுகள் வந்து சேரவில்லையென்பதை ஸ்பஷ்டமாகக் காண்பித்து, இவ்வித நிலையில் கும்பகோணம் ஸ்வாமிகளும் தாடங்க பிரதிஷ்டை செய்யலாம் என்ற ரீதியில் வாசகங்கள் அமைந்திருக்கின்றன. இதை தங்களுக்குத்தான் அனுகூலம் என்று கருதி 1846ம் ஹூ அகிலாண்டேஸ்வரிக்கு தாடங்க பிரதிஷ்டையை கும்பகோணம் ஸ்வாமிகள் நடத்திவிட்டார். ஆக இந்த அளவுக்கு சந்திரசேகரர் —2, கும்பகோண மடத்துக்கு ஓர் முன்னேற்றத்தை ஏற்படுத்திவிட்டார். அடுத்த ஸ்வாமிகளான மஹாதேவர் —3 (1851 —1891) முந்தின ஸ்வாமிகள் தொடங்கியதை நாடெங்கும் நிலைநாட்ட அகில இந்திய விஜய யாத்திரையை கைக்கொண்டு வடதிசை

நோக்கிப் புறப்பட்டார். வடக்கே செல்லச்செல்ல ஒருவரும் காஞ்சி காமகோடி பீடத்தை ஒப்புக்கொள்ளவில்லையென்பது புரிந்தது. ஜகன்னாத் பூரியில் தான் எடுத்துக்கொண்ட பக்ஷத்தை நிலைநாட்ட முடியாமல் வடஇந்திய யாத்திரையைக்கைவிட்டு தென்னாடு திரும்பி விட்டார். இதே சமயத்தில்தான் கி.பி.1886ம் ஆண்டில் காசியில் பல பண்டிதர்கள் சபைகூடி காஞ்சிமடத்தை ஒப்புக்கொள்ளவில்லை என்ற தீர்மானத்தை நிறைவேற்றி வெளியிட்டார்கள். மகாதேவர்-3க்குப் பின் வந்த சந்திரசேகரர் – 3 (1891 —1907) காலத்தில் இந்த காஞ்சி மடப்பிரச்னை ஓய்ந்திருந்தது எனக்கூறலாம். இவர் வைசூரியால் மரணம் அடைந்தபின் இவருக்கு அடுத்துவந்த மகாதேவர் 4 (18 வயது யுவர்) "முந்தின ஆசார்யர்" ஸித்தியடைந்ததைக் குறித்து வருத்தம் தாங்காததால் இவருக்கும் வைசூரி ஏற்பட்டு 7 தினங்களில் மரணமடைந்தார். இதன்பிறகு இப்பொழுது பட்டத்திலிருக்கும் ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி 4. கி.பி. 1907 முதல் இருந்து வருகிறார். ஆக கி பி. 1704 ஆம் முதல் தொடங்கிய குருபரம்பரை இன்றுவரை ஹொய்சால பிராம்மண வகுப்பினரால் நிரப்பப்பட்டு வந்து கொண்டிருக்கிறது. இந்த வகுப்பாருக்குத்தான் இந்த உரிமை யென்ற ஓர் லோக அபவாதத்தைப் போக்கிக் கொள்வதற்காகவே, வடம பிராமண வகுப்பைச் சேர்ந்த ஒருவர் அடுத்த வாரிசாக 1955ம் ஆல் நியமிக்கப்பட்டுள்ளார் என்பதும் ஓர் ராஜதந்திரமாக ஆகும். முந்தின மகாதேவர் – 3 பூரிவரை சென்று கோரிய எண்ணம் நிறை வேறாமல் தெற்கே திரும்பிவிட்டார். இப்பொழுது பதவியிலிருக்கும் சந்திரசேகரேந்திர சரஸ்வதி – 4 நேபாள தேசம் வரை போவதாக சங்கல்பம் செய்த போதிலும் காசிவரை சென்று பூஜைகளை பறி கொடுத்து 9 – 3 – 1935ம் தேதியில் ஒரு விதமான வந்தனோப சாரத்துடன் காசியிலிருந்து திரும்பினாரென்பது வடதேசத்தார் யாவரும் அறிந்துள்ளார்கள். இவர் காசியிலிருக்கும்பொழுதே காசியிலுள்ள பண்டிதர்களில் பலர் ஒன்றுகூடி "காஞ்சியில் ஆதி சங்கரர் மடம் ஸ்தாபிக்கவில்லை" என்பதை தீர்மானமாகவே நிறைவேற்றியிருக்கிறார்கள். ஏதாவது ஓர் விதத்தில் ஜயமுண்டா என்றால் தன்னை வெகு மதித்த இடங்களில் பல வரவேற்பு பத்திரங்கள் கொடுக்கப்பட்டு அதில் "ஆதிசங்கரர் பிரதிஷ்டை செய்த காஞ்சி காமகோடி பீடாதி பதிகளுக்கு வாசித்தளிக்கப்பட்ட வரவேற்பு" என்ற வாசகங்களையுடைய பத்திரங்களை வாங்கியிருப்பது ஒன்றுதான் பெரிய அனுகூலம். இவர் செய்துள்ள யோசனைகளுள் சில மிகவும் பயனளித்துள்ளன. அதாவது (1) பிரசாரத்துக்கு வித்வான்களை தேர்ந்தெடுத்து சால்வைகள் சம்பாவனை கொடுத்து, அவர்கள் செய்யும் ராமாயண, பாரத, பாகவத பிரசங்கங்களில் காஞ்சீ பெரியவாளை "நெல் பொறி சாப்பிட்டுக்கொண்டு விரதமாக இருக்கிறார். ஆதிசங்கரரைப் போல கால்நடையாகவே யாத்திரை செய்கிறார். நடமாடும் தெய்வம்"

என்ற விதமாக புகழ்ச்சியாகக் கூறச்செய்வது. (2) பத்திரிகை உலகத்தைக் கைப்பற்றி, பத்திரிகை ஆசிரியர்களின் கட்டுரைகளால் "காஞ்சி காமகோடி பீடம் — ஜகத்குரு" என்ற பட்டத்தை நிலைபெறச் செய்தும்; இன்னும் இவருக்கு இல்லாத உரிமைகள் பல இருப்பது போல வெளியிடச்செய்து இதன்மூலம் தனக்கும் மடத்துக்கும் பெருமையை சம்பாதிப்பது. (3) பாரத தேசத்தில் ஆங்காங்கு சர்க்கார் உத்யோகம்; அதிகாரம் செல்வாக்கு உள்ள மடத்து சிஷ்யர்கள் மூலம் மடத்துக்கு சலுகைகள்; ஆதரவுகள், பிரசாரங்கள், பணவசதிகள் ஆகியவற்றை ஏற்படுத்திக் கொண்டிருப்பது. (மதராஸ் சர்க்கார் மூலம் வியாஸாசலீய சங்கரவிஜயம்; அனந்தானந்தகிரி சங்கரவிஜயம் வெளியிடச் செய்தது இந்த வகையில் அடங்கும்) இது போன்ற பிரசார பலத்தால் மடத்துக்கு ஓர் பிரகாசத்தை உண்டுபண்ணிவிட்டனர். ஆக சந்திரசேகரர் 2 கி.பி. 1843ம் ஆண்டு முதல் தொடங்கிய காரியத்தை சந்திரசேகரர் 4 தன் செல்வாக்கால் பலப்படுத்தினர் என்பது குறிப்பிடத் தக்கது.

## *VIII* மடத்தின் இருப்பிடம் காஞ்சியா? கும்பகோணமா?

இப்பொழுது கும்பகோணத்தின் மடாதிபதியாக இருந்து கொண்டிருக்கும் ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி 4 அவர்களின் சரித்ரத்தை "ஜகத்குரு திவ்ய சரித்ரம்" என்ற பெயரில் ஒரு புஸ்தகத்தை மேற்படி ஸ்வாமிகளின் சகோதரரான ஸ்ரீ சாம்பமூர்த்தி சாஸ்திரிகள் 1957ம் வருஷத்தில் வெளியிட்டார். அதில் சில பொய் சம்பவங்கள் கலந்திருக்கின்றன. அவை நமக்கு பிரகிருதமில்லை. அதே புஸ்தகத்தில் உண்மையான அம்சம் ஒன்று உள்ளது. அதைமட்டும் எடுத்துக் கொண்டு ஓர் விஷயம் வாசகர்களுக்கு அறிவிக்கப்படுகிறது. ஸ்ரீ சந்திரசேகரர் 4, 1919ம் வருஷம் மார்ச் மீ" சிவராத்ரி அமாவாசையன்று கும்பகோணத்திலிருந்து இருபத்தோராண்டு யாத்திரைக்குப் புறப்பட்டார்கள். (ஜ ச.பக்கம் 47) 1921ம் வருஷத்தில் கும்பகோணத்தில் மஹாமகம் நடைபெற்றது. அப்பொழுது ஸ்வாமிகள் கும்பகோணத்துக்கு வந்தார்கள். 1919ம் வருஷத்தில் ஸ்வாமிகள் சங்கல்ப யாத்திரை தொடங்கிவிட்டதால் கும்பகோணத்தில் உள்ள தம் மடத்திற்கு அப்பொழுது விஜயம் செய்யவில்லை. மஹாமகக்குளம் தென் கரையிலுள்ள மண்டபத்தில் ஸ்வாமிகள் தங்கி தடாகத்தில் ஸ்நானம் செய்தார்கள். (ஜ. ச பக்கம் 53) பிறகு 25—1—1931 தேதியில் காஞ்சீபுரத்துக்கு முதன்முதலாக ஸ்வாமிகள் விஜயம் செய்தார்கள். (19)7ம் வருஷத்தில் பட்டம் ஏற்றபின் சுமார் 24 வருஷங்கள் காஞ்சீபுரத்துக்கே செல்லவில்லையென்றும், இப்பொழுதான் முதன் முதலாக காஞ்சிக்குச் சென்றார் என்றும் கூறுவதால் இவரை காஞ்சி காமகோடி

பீடாதிபதி என்று எப்படிக் கூறுவது என்பதை வாசகர்கள் ஆராய்ச்சி செய்யவேண்டும்) பெரிய காஞ்சீபுரத்திலுள்ள தமது மடத்தில் ஸ்வாமிகள் ஒரு மாத காலத்துக்கு மேல் தங்கினார்கள். (ஜ.ச.பக்கம் 148 — 149) கும்பகோணம் ஸ்வஸ்தானமாகையால் யாத்ரா சங்கல்பம் அங்கு தொடங்கியது. மத்தியில் மஹாமக காலத்தில் வர நேரிட்ட பொழுது தன் மடத்துக்குச் செல்லவில்லை. காஞ்சியை ஸ்வஸ்தானமாகக் கருதவில்லை. ஆகவே யாத்ரா மத்தியில் காஞ்சியில் தன் மடத்திலேயே தங்கினார்கள். முடிவில் 1939ம் வருஷம் ஜுன் மீ 29ம் தேதி கும்பகோணத்தை அடைந்தார்கள். ஸ்வாமிகளின் 21 ஆண்டு சங்கல்ப யாத்திரையும் மிகுந்த வெற்றியுடன் அன்று பூர்த்தியடைந்தது. × × × அன்றிரவு நகரமக்கள் மிகப்பெரியதொரு ஊர்வலத்தை ஏற்பாடு செய்ய அவ்வூர்வலம் காவேரியின் கரையிலமைந்துள்ள ஸ்ரீ மடத்தை இரவு 2 மணிக்கு அடைந்தது. (ஜ.ச. பக்கம் 314 — 315) இந்த சரித்ர மூலம் இந்த ஸ்வாமிகளுக்கு வாசஸ்தானம் கும்பகோணமா? காஞ்சியா? என்பதை வாசகர்களே தீர்மானிக்கவேண்டும். மேலும் இவர் 13—2—1907ம் தேதியில் இதுவரை ஸ்வாமிநாதனாக விளங்கியவர் முண்டனம், தண்டம், கமண்டலு, காஷாயம் இவைகளை கலவை கிராமத்தில் ஏற்றுக்கொண்டு ஆதிசங்கரர் போலவே ஸன்யாசி ஆகி (ஜ.ச. பக்கம் 16) ......... நம் ஸ்வாமிகளுக்கு முறைப்படியே பட்டாபிஷேகம் செய்து அவ்வைபவத்தை சிறப்பாகக் கொண்டாட வேண்டுமென்று சீடர்கள் பல்லோரும் விரும்பினார்கள். இவ்வைபவம் பிலவங்க ஹு சித்திரை மீ 27ம் தேதி (9—5—1907) வியாழக்கிழமை கும்பகோணம் மடத்தில் மிக விமர்சையாகக் கொண்டாடப்பட்டது. (ஜ ச. பக்கம் 18) காஞ்சிக்கு மிக சமீபத்தில் உள்ள கலவை கிராமத்திலிருந்து காமகோடி பீடத்தின் வாசஸ்தானமான காஞ்சிக்குச்சென்று பட்டாபிஷேகம் செய்து கொள்ளாமல், வெகு தூரத்திலுள்ள கும்பகோணம் ஸ்ரீ மடத்தில் விமர்சையாக பட்டாபிஷேகம் நடத்திவைக்கப்பட்டது, என்பதிலிருந்து என்ன ஏற்படுகிறது? இவர் கும்பகோணம் மடம் ஸ்வாமிகள்தான்! காஞ்சி காமகோடி பீடாதிபதி அல்ல என்பதை ஸ்ரீ சந்திரசேகரேந்திரர் — 4 ஸ்திரப்படுத்தியுள்ளார் என்பது வெளியாகிறதல்லவா? மேலும் முந்தின ஆசார்யர் ஒருவரால் ஆதரவு கொடுக்கப்பட்டு விளங்கிய ஓர் த்ருக் கணித பஞ்சாங்கம் இவர் காலத்திலும் கூட "கும்பகோணம் மடம் பஞ்சாங்கம்" என்று விளங்கியதை யாவரும் அறிவார்கள் சில வருஷங்களுக்குமுன்னர்தான் இப்பஞ்சாங்கத்தை "ஆசார்ய மடத்துப் பஞ்சாங்கம" என்று பின் யோசனையின் மீது மாற்றப்பட்டது என்பதும் வெட்ட வெளிச்சமே! ஆக காஞ்சிக்தும, இந்த ஸ்வாமிகளுக்கும், காமகோடிக்கும் சம்பந்தமில்லையென்பது மிகத் தெளிவு. தவிரவும் சுமார் 20 வருஷங்களுக்கு முன் ஏதோ நிமித்தம் ஏற்பட்டு இந்த

ஸ்வாமிகள் "காமாக்ஷி அம்மன் கோவில் டிரஸ்டி" என்ற அந்தஸ்தை ராஜிநாமா செய்ததும், பின்னர் அந்தநிமித்தம் சரிப்பட்டுப் போன பின் 1960ம் வருஷத்துக்குப் பிறகு மறுபடியும் புதுப் பெரியவாளான ஜயேந்த்ர சரஸ்வதியின் பெயருக்கு டிரஸ்டி உத்யோகத்தைப் பெற்றதும் யாவருக்கும் மறந்து போயிருக்காது என நம்பப்படுகிறது. ஹிந்து அறநிலைய போர்டு ஆபிஸிலும் ரிக்கார்டுகள் இருந்து கொண்டிருக்கின்றன. இதிலிருந்து கும்பகோணம் ஸ்வாமிகள் காஞ்சி காமாக்ஷியம்மன் கோவிலுக்கு டெம்பரரி டிரஸ்டிதான் என்றும் சர்க்கார் ஆதீனத்தில் நியமிக்கப் படுகிறார் என்றும் அறியப்படுகிறது. அப்படியானால் பராம்பிகை காமாக்ஷி ஒருவளுக்கே உரித்தான காமகோடி பீட நிலயத்தை ஒரு ஸன்யாசி எப்படிக் கவர்ந்து கொள்ளலாம் என்பதையும் விமர்சனம் செய்ய வேண்டிய அவசியம் உண்டு. இதற்கு நேர்மாறாக சிருங்கேரியிலிருக்கும் ஸ்ரீ சாரதாம்பாள் ஆலயம் ஆதிசங்கரர் காலம் முதல் இன்றுவரை சர்க்காரின் தொடர்பில்லாமல் சிருங்கேரி ஜகத்குருவின் நேர் பார்வையிலேயே இருந்து வருகிறது என்பதையும் வாசகர்கள் அறிவார்கள்.

## *IX* ஐந்தாவது மடத்தை நான்காவது மடமாகக் கல்பிக்கும் விந்தை.

1974ம் வருஷத்தில் வடக்கேயுள்ள பதரீமட விஷயமாக டில்லி சுப்ரீம்கோர்ட்டில் ஓர் அப்பீல் தீர்மானமாகியுள்ளது அந்தத் தீர்ப்பில் ஆதிசங்கரர் நான்கு திக்குக்கும் நான்கு ஆம்னாய மடங்கள் ஸ்தாபித்ததாயும் அந்த நான்கு ஆம்னாய மடங்களுள் ஒன்றான பதரீமடம் சம்பந்தமாக இவ்வழக்கு என்ற வாசகம் காணப்படுகிறது. இந்த தீர்ப்பானது சுப்ரீம் கோர்ட் (Full Bench) தீர்மானமாக இருப்பதால் அசைக்க முடியாத ஓர் ஆதாரமாக ஏற்பட்டுவிட்டது. பதரியை மட்டும் அந்தத் தீர்ப்பில் குறிப்பிட்டிருக்கிறபடியாலும்; மற்ற மூன்று மடங்களின் பெயர்களைக் கூற விட்டுப்போனபடியாலும் கும்பகோண மடத்தாருக்கு ஒரு யோசனை தோன்றிற்று. தெற்கு திக்குக்கு சிருங்கேரி மடம் என்பதாகவே தங்களுடைய முன் பிரசாரங்களில் இன்றுவரை இருந்துவர, அதை மாற்றியமைக்க வேண்டுமென ஓர் நூதன கல்பனை தோன்றியது. சிருங்கேரியின் பெயரையே நீக்கிவிட்டு "காஞ்சியில் காமகோடி பீடம்" தெற்கு திக்குக்காக ஏற்பட்டது என கல்பனை செய்து பிரசாரம் செய்ய முன்வந்துள்ளார்கள். இப்படி ஒரு கல்பனையை, தன் மடம் ஸ்திரமாக்கப்படவேண்டுமென உத்தேசித்து, பிரசாரம் செய்யவேண்டுமென்று கும்பகோணம் ஸ்வாமிகள் விரும்பினால் அந்தப் பிரசார பணிக்கு வேறு யாராவது ஒரு புதிய பேர் வழியை தேடிப்பிடித்து பிரசாரம் செய்ய திட்டம்போட்டிருக்கலாம். அசட்டுத்தனமாக மதுரை யுனிவர்சிடி புரொபஸரான Dr. வீழிநாதனை தேடிப் பிடித்திருக்க வேண்டாம். 1971ம் வருஷத்தில் "அனந்தா

னந்தகிரி சங்கரவிஜயத்தை" வெளிப்படுத்திய Dr. வீழிநாதன் தன்னுடைய மேலே காட்டிய புஸ்தகத்தில் 62வது அத்யாயத்தில் சிருங்கேரியில் ஆதிசங்கரர் 12 வருஷகாலம் வாஸம் செய்து ஓர் மடம் ஸ்தாபித்ததாகக் கூறியிருக்கிறேமே; அதற்கு மாருக இப்பொழுது சிருங்கேரியின் பெயரையே எப்படி விட்டுவிடுவது என்று தீர்க்கமாய் ஆலோசித்து, முன்னுக்குப்பின் முரணுக ஏற்படும் இப்பணியை ஒப்புக்கொள்ளாமல் ஜாக்ரதையாக மறுத்திருக்கலாம். மேலும் முன்னர் கல்பிக்கப்பட்ட மடாம்னுயசேது, ஸுஷமா முதலிய கிரந்தங்களேயும், காமகோடி பிரதீபம் சுபகிருது ஹு ஆனி, ஆடி, ஆவணி மாதங்களில் போலகம் ராமசாஸ்திரியளால் பிரசுரிக்கப்பட்ட "ஆதிசங்கரர் ஸ்தாபித்த 8 மடங்கள்" என்ற கட்டுரைகளேயும், 8 மடங்களுக்குரிய படலங்களேயும், Dr வீழிநாதன் ஆராாய்ச்சியாளர் என்ற முறையில் பார்க்காமலிருந்திருக்க மாட்டார். கும்பகோணம் மடத்தாரின் இவ்வளவு கிரந்தங்களேயும் மறுக்கும்படியான ரீதியில், இப்பொழுது எழுத வேண்டிய கட்டுரை அமைகிறதே என்று கருதி Dr. வீழிநாதன் புத்திசாலித்தனமாக இப்பணியை நிறைவேற்ருமல் மறுத்திருக்கலாம். இவ்வளவு சூழ்நிலேகளேயும் யோசிக்காமல் பொய் பிரசாரம் என்று தெரிந்து மனதாரத் துணிந்தே (Deliberately) Dr. வீழிநாதன் மதருஸிலிருந்து வெளியாகும் "மாலா வெள்ளி விழா மலர் 1976" என்ற பத்திரிகையில் பக்கம் 18 முதல் 21 வரை "அத்வைத வேதாந்தமும், ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடமும்" என்ற கட்டுரையில் இவ்விதம் எழுதுகிருர். "பாரா 5 — இவ்விதம் உலகிலுள்ள ஜீவராசிகள் எல்லோரும் ஆத்மஞானத்தை அடையவேண்டுமென்ற உன்னதமான லக்ஷ்யத்துடன் வேதாந்த கிரந்தங்களே இயற்றி அவற்றை உலகில் பிரசாரம் செய்ய, பாரத தேசத்தின் முக்யமான திக்குகளில் மடங்களே ஸ்தாபித்தார். ஒரு மடமானது தேவதா, சக்தி, க்ஷேத்ரம் ஆகிய மூன்றுடன் கூடியது. வடக்கு திசையில் ஸ்தாபிக்கப்பட்ட மடமானது ஸ்ரீ பூர்ணகிரியை சக்தியாகவும், பதரிநாதரைதேவதையாகவும், பதரியை க்ஷேத்ரமாகவும் கொண்டது. ஸ்ரீ விமலாசக்தியாகவும், ஜகன்னுதர் தேவதையாகவும் பூரி க்ஷேத்ரமாகவும் உள்ளது, கிழக்கு திசையில் ஸ்தாபிக்கப்பட்ட மடம். மேற்கு திசையில் ஸ்தாபிக்கப்பட்டுள்ள மடத்திற்கு பத்ரகாளீ சக்தி, ஸித்தேஸ்வரர் தேவதை த்வாரகா க்ஷேத்ரம்' தெற்கு திக்கில் ஸ்தாபிக்கபட்ட மடத்திற்கு ஸ்ரீகாமாக்ஷி சக்தி, ஆதிவராஹர் தேவதை, ராமேஸ்வரம் க்ஷேத்ரம். தேவதையான ஆதிவராஹருக்கும், காமாக்ஷிக்கும் ஸ்தானம் ஸ்ரீ காஞ்சியில் உள்ள "காமக்கோட்டம்" இவ்விதம் மாலா பத்திரிக்கையில் காணப்படுகிறது. கீழ்க்கண்ட கேள்விகளுக்கு கட்டுரை ஆசிரியரே பதில் சொல்ல வேண்டியவராக இருக்கிருர். (1) 'ஜீவராசிகள் எல்லோரும் ஆத்மஞானம் அடையவேண்டும்" என்ருல், ஜீவராசிகளுள் அடங்கிய பிராணி

கள், பக்ஷிகள் இவைகளுக்கும் வேதாந்த கிரந்தங்கள் இயற்றப்பட்டன வா? (2) மடமானது (a) தேவதா (b) சக்தி (c) க்ஷேத்ரம் ஆகிய மூன்றுடன் கூடியது என்றால், பதிமூன்று அம்சங்கள் அடங்கிய தாக இருக்கவேண்டுமென்று முன்னர் போலகம் ராம சாஸ்திரியள் கூறிய கட்டுரைக்கு இது மறுப்பா? (3) தெற்கு திக்குக்கு ஏற்பட்ட மடத்துக்குரிய வேதம் என்ன? மஹா வாக்யம் என்ன?

சாதாரணமாக ஆராய்ச்சித்துறையில் உத்யோகம் வகிப்பவர்கள் பூர்வ கிரந்தங்களை ஆராய்ச்சிக்காக ஆதாரமாகக் கொண்டு அதி லிருந்து ஆராய்ச்சி செய்யப்பட்ட விஷயங்களை வியாஸங்களிலும், புஸ்தகங்களிலும் எழுதவேண்டும் என்ற நியதி உண்டு. மடாம்னாயம்; மடாம்னாய சேது என்று அனுபந்தங்களில் காட்டியுள்ளவைகள் புஸ்தக ரூபமாய் அவச்யம் யுனிவர்ஸிடி லைப்ரரியில் இருக்கவேண்டும். அவற்றை இந்தக்கட்டுரை ஆசிரியர் மிக உன்னிப்பாய்ப் பார்த்திருக்க மாட்டாரெனத் தெரிகிறது பார்த்திருந்தால் வடக்கு கிழக்கு மேற்கு மடங்களுக்கு உத்தேசமாக விவரம் கொடுத்திருக்கிறார் போல; தெற்கு திக்குக்கும் ஆதாரங்களில் உள்ளபடியே விவரங்கள் கொடுத்திருக்க வேண்டும் சரியாகக்காட்டாத வரையில், கட்டுரையில் கூறியது ஓர் நூதன கல்பனை என்றே ஏற்படுகிறது. கும்பகோணம் மடத்தாரின் கல்பனா மடாம்னாயசேதுவிலும்கூட இப்படிக் கூறப்படவில்லை யென் பதை போலகம் ராம சாஸ்திரியளின் கட்டுரைகளை வாசித்தவர்கள் தெரிந்து கொண்டிருக்கலாம். மேலும் இக்கட்டுரை ஆசிரியருக்கு ஸம்பிரதாயம் தெரியாது. என்பதை வெளிப்படுத்திவிட்டார். ஸம் பிரதாயம், ஆம்னாயம் தெரிந்தவராயிருந்தால் மிகப் பிரதானமான அம்சமான மடங்களுக்குரிய வேதம்; மஹாவாக்யம்; யோகபட்டம் இவைகளையும் கூறியிருக்கவேண்டும். அல்லது முன்னுக்குப்பின் முரணும், விவாதங்களும் ஏற்படும் என்று ஆலோசித்தே வேதம், மஹா வாக்யம் முதலியவற்றை இக்கட்டுரை ஆசிரியர் விட்டுவிட்டிருக்க வேண்டுமென ஊகிக்க இடமளிக்கிறது. இக்கட்டுரை ஆசிரியரான Dr.வீழிநாதன் தான் "அந்தானந்தகிரி சங்கரவிஜயத்தை" மிக்கபிரயா சையுடன் யுனிவர்ஸிடி வெளியீடாக 1971ம் ஆண்டில் வெளியிட்டு கும்பகோண மடத்தின் பெருமையை நிலைநாட்ட முயன்றவர், அந்த புஸ்தகத்துக்கு ஆங்கிலத்திலும், தமிழிலும் ஏற்பட்ட ஆக்ஷேபணை களுக்கு இன்றுவரை சமாதானம் கூறவில்லை. சமாதானம் கூறவும் இயலாது. இப்போதுமுன்பின் யோசியாமல் மாலாவில் உண்மை போல ஒரு கட்டுரையைக் கொடுத்து விட்டார். ஆதிசங்கரர் ஸ்தாபித்தது சிருங்கேரியுள்பட நான்கு மடங்கள்தான் என இன்று வரை கூறிக்கொண்டிருக்கும் சாராரின் ஆக்ஷேபணைகள் ஒருபுறமிருக் கட்டும். ஐந்து மடமென்று கல்பனா புஸ்தகங்களைப் பிரசாரம் செய்தும், அதைப்பார்த்துமுள்ள ஸ்ரீ N. ராமேசன்

I. C. S: ஸ்ரீ ப. சங்கரநாராயணன்; ஸ்ரீ L. S. பார்த்தசாரதி அய்யர் முதலியோர் கீழ்க்கண்ட கேள்விகளை எழுப்பினால் Dr. வீழிநாதனுடைய பதில் என்ன? என்பதை வாசகர்கள் அறிய விரும்புகிறார்கள். தயவுசெய்து Dr. வீழிநாதன் பதில் கூறுவாரா? (1) கும்பகோண மடத்தாரின் மடாம்நாய சேதுவில் சிருங்கேரியை ஒப்புக்கொண்டு காஞ்சியை "மூலாம்நாயம்; மத்யாம்நாயம்; மௌலாம்நாயம்" என்று கூறி வந்துள்ளதே! அந்த மடாம்நாய சேது தவிடுபொடியாகி விட்டதா? மூலாம்நாயம், மத்யாம்நாயமெல்லாம் மறைந்து விட்டதா? (2) இந்த மடாம்நாய சேதுவை ஆதாரமாக வைத்துக்கொண்டு போலகம் ராமசாஸ்திரியளுட்பட பலபேர்கள் பல கட்டுரைகள் எழுதியிருந்தார்களே. அவையனைத்தும் பிதற்றலா? பித்தலாட்டமா? (3) தக்ஷிணாம்நாயமான சிருங்கேரி யஜுர்வேத மடம். இப்பொழுது காஞ்சி மடத்தை தக்ஷிணதேசத்துக்கானதென Dr. வீழிநாதன் மாற்றம் கொடுத்துதிட்டப்படுத்தியிருப்பதால் காஞ்சிமடம் யஜுர்வேதமடமாக ஆகிவிட்டதா? அப்படியானால் ஆத்மபோதேந்திரரால் தனது குருரத்ன மாலையில் கூறியதாகச் சொல்லப்படும் "காஞ்சீமடத்துக்கு ரிக்வேதம்" என்ற வார்த்தைக்குப் போக்கு எங்கே? அவர்கள் மடத்து ஆசார்யரே கூறிய வார்த்தையை Dr. வீழிநாதன் மறுக்கிறாரா? மாற்றுகிறாரா? (4) Dr. வீழிநாதன் வெளியிட்ட அனந்தானந்தகிரி சங்கரவிஜயத்தில் 62ம் அத்யாயத்தில் ஆதிசங்கரர் சிருங்கேரியில் மடம் ஸ்தாபித்ததாகவும், அங்கு ஓர் பத்மபாதரை நியமித்ததாகவும் கூறப்பட்டுள்ளதே அந்த அத்யாயம் Dr. வீழிநாதனுடைய கட்டுரைக்கு இடைஞ்சலாக இருப்பதால் ஷெ அத்யாயத்தை நீக்கிவிடக்கருதுகிறாரா? (5) மேற்படி அனந்தானந்தகிரி சங்கரவிஜயத்தில் 145ம் பக்கத்தில் தன் குறிப்பில் "ஓம். தத். ஸத்" என்ற மஹாவாக்யத்தை நிலை நிறுத்த Dr. வீழிநாதன் மிக்க பிரயாசையெடுத்துக் கொண்டாரே; அந்த மஹாவாக்யம் காஞ்சீ மடத்தைச் சேர்ந்ததா? இல்லையா? (6) இம்மடத்தாரின் ஸுஷமா முதலிய கிரந்தங்களிலுள்ள பற்பல பாகங்கள் "மாலா" கட்டுரைக்கு விரோதப்படுகின்றனவே. அப்படி விரோதப்படும் பாகங்களுக்கு Dr. வீழிநாதனுடைய பிரத்யேகமான சமாதானங்கள் யாவை? இவ்விதக் கேள்விகளை கும்பகோணம் மட அபிமானிகளே எழுப்பக்கூடும். ஏனென்றால் முற்கூறியவைகளுக்கும் அதன் ஆதாரங்களுக்கும், இன்று மாலாவில் வந்த விஷயம் விரோதப்படுவதால், சமாதானம்கூறி Dr. வீழிநாதன் தன் கல்பனையை நிலைநிறுத்துவார் என எதிர்பார்க்கப்படுகிறது. தவிரவும் கும்பகோணம் ஸ்வாமிகள் இப்படிப் பிரசாரம் செய்ய Dr. வீழிநாதனுக்கு அனுமதியளித்திருக்கிறார் என்று நம்பப்படுகிறது. அப்படியானால் அவரே மேற்காட்டிய கேள்விகளுக்கு சமாதானம் கூறவேண்டும். அல்லது தன் அனுமதியில்லாமலேயே Dr. வீழிநாதன் பிரசாரம் செய்திருந்தால், Dr. வீழிநாதனுடைய கட்டுரைக்கு ஸ்வாமிகளே மறுப்புத் தெரிவிக்கும் நிலையிலிருக்கிறார்.

மறுப்பும் தெரிவித்தாகவேண்டும் என்பதையும் வாசகர்கள் விரும்புகிருர்கள். அப்பொழுதுதான் முன்பின் விரோதமில்லாமலிருக்கும் என்றும் இல்லாவிட்டால் பழைய பொய்களை மறைக்க இப்பொழுது ஒரு நூதனமான பொய் கல்பிக்கப்படுகிறது என்றும் வாசகர்கள் நம்பும்படி ஏற்படும். ஜன்ம ஜன்மாந்தரத்திலும் மடாதிபதியாக இருக்க வேண்டாமென்றும் அந்ருதவசனம் வேண்டாமென்றும் ஆதிசங்கரர் ஒரு ஸ்தோத்ரத்தில் கூறியிருக்க; 19ம் நூற்ருண்டுப் பொய்களுடன், 20ம் நூற்ருண்டுப் பொய்யையும் சேர்த்துக் கொண்டு, ஒரு ஸன்யாசி மடம் இருக்க வேண்டுமா என்ற கேள்வியும் ஏற்படுகிறது. பாட்ஞ ஹைகோர்ட் தீர்ப்பிலும் — பம்பாய் ஹைகோர்ட் தீர்ப்பிலும் தென் திசைக்கு சிருங்கேரி மடம் ஸ்தாபிக்கப்பட்டது என ஸ்பஷ்டமாகக் கூறப்பட்டிருக்க, அந்தத்தீர்ப்புகளுக்கு முரணுக Dr வீழிநாதன் இன்று செய்யும் பிரசாரம் கோர்ட்டாரின் தீர்ப்பையும் புறக்கணிப்பதாகும் என்ற பிரச்னையையும் Dr. வீழிநாதன் யோசிக்கவேண்டிய விஷயமாக ஆகிறது. Dr. வீழிநாதன் கும்பகோணம் மடத்துக்கு அனுகூலம் செய்ய நினைத்து இவ்வித அவல நிலையை ஏற்படுத்தி, மட அபிமானிகளுக்குள்ளேயே பிளவுகள் உண்டாக்கி இம்மடத்துக்கே சத்ரு ஆக வேண்டாம்; தவிரவும் ராமேஸ்வரம் சிருங்கேரி மடத்தின் க்ஷேத்ரமாக விளங்கிவரும் நிலையில், அதைத்தன் பேனு முனையினுல், காஞ்சீ மடத்தின் க்ஷேத்ரம் என்று Dr. வீழிநாதன் கூறுவது ஓர் அடாத பாபமேயாகும். 18—6—1976ம் தேதியில் ஹிந்து பத்திரிகையிலும், இந்தியன் எக்ஸ்பிரஸ் பத்திரிகையிலும் குருவாயூர் கிருஷ்ணன் கோவிலில் நடைபெற்ற அஷ்டமங்கள ப்ரஸ்னத்தின் விவரங்களை யாவரும் பார்த்திருக்கலாம். இதைப்பார்த்த பின்னரும் யாருக்கும் வியாமோஹம் ஏற்பட ஞாயமில்லை. குருவாயூர் கிருஷ்ணன்கோவில், பத்ரி நாராயணர் கோவில், ராமேஸ்வரம் ராமனுதஸ்வாமி கோவில், நேபாளம் பசுபதி நாதர் கோவில் இவைகளில் சிருங்கேரி ஜகத்குருவுக்கு இருக்கும் உரிமைகள் கேரள தேச மன்னருக்கும் சேது காவலருக்கும் நேபாள மன்னருக்கும் தெரியும் ரிக்கார்டுகளும் இருக்கின்றன. பத்திரிகைகளின் பலம் கொண்டு, பேனு முனையினுல் இந்த உரிமைகளை மாற்ற ஒருவரும் யத்தனம் செய்ய வேண்டாம்! அடாது செய்தால் படாது படுவர். தெய்வம் நின்று கேட்கும். இறுதியில் ஸத்யமே வெல்லும்.

இந்தப்ரக்ருதத்தில் 1972ம் ஆண்டில் "தோன்றி மறைந்த" ஒரு சம்பவம் குறிப்பிடப்படுகிறது. இன்று மாலாவில் Dr. வீழிநாதன் கூறும் சங்க்ரஹமான கல்பனையை விஸ்தாரமாகத் தயாரித்துக்கொடுத்தவர் மதராஸ் யுனிவர்ஸிடியைச் சேர்ந்த புரொபஸர் Dr. V. A. தேவசேனுபதியாவார். 1972ம் வருஷத்தில் "காமக்கோட்டம் — நாயன்மார்கள் — ஆதிசங்கரர்" என்ற தலைப்பில் சுமார் 72 பக்கங்களடங்கிய

(Typewriter Cyclostyled) யாதாஸ்து Dr. V.A. தேவசேனுபதியால் தயாரிக்கப்பட்டது. அவரே 1972ம் வருஷத்தில் இந்த யாதாஸ்தை அச்சுப் புத்தகமாகப் போட்டு பிரசாரம் செய்வதாகவுமிருந்தது. ஆனுல் சில நிமித்தங்களால் அவருடைய மனசாக்ஷி மேற்படி புத்தகத்தை வெளியிட வேண்டாமென வற்புறுத்தியது போலும்! ஸத்யத்துக்கு முரணுன காரியத்தில் இறங்க மாட்டேன். அதற்கு ஆதிசங்கரர் உதவிபுரியட்டும் என்று அவர் கைக்கொண்ட முயற்சியைக் கைவிட்டு விட்டார். இந்த யாதாஸ்தில் ஆதிசங்கரர் தன்னைத் தொடர்ந்து வரும் சாரதா தேவியை, திரும்பிப்பார்க்கக் கூடாது என்ற நிபந்தனைக் குட்பட்டு, சாரதாவை அழைத்துக்கொண்டு போனதாகவும், சிருங் கேரியை அடைந்ததும் அவர் சாரதாவை திரும்பிப் பார்த்ததாகவும் அதனுல் அங்கு சாரதாவை பிரதிஷ்டை செய்து மடம் ஏற்படுத்தும்படி நிர்ப்பந்தம் ஏற்பட்டது என்பதாகவும் மைசூர் ஜனங்கள் ஒரு ஐதீகத்தைக் கூறினுர்களாம். ஆனுலும் காஞ்சி மடம்தான் நான்கு மடங்களுள் ''தக்ஷிணும்னுயம்'' என்று அப்புக்கட்டிக் கூறப் பட்டுள்ளது. சிருங்கேரியைத்தான் சாரதாவை பிரதிஷ்டை செய் வதற்கும் மடம் ஸ்தாபிப்பதற்கும் ஆதிசங்கரர் தேர்ந்தெடுத்தார் என் பதற்கு காரணம் 10-11ம் பக்கங்களில் நன்கு விளக்கப்பட்டிருக்கிறது. ஏதோ நிர்பந்தத்தின் பேரில் ஆதிசங்கரர் சிருங்கேரியில் சாரதாவை பிரதிஷ்டை செய்தாரென்றும்; மடம் ஏற்படுத்தினுரென்றும் Dr.V.A. தேவசேனுபதி கூறுவது கல்பனு மாத்ரமே. காஞ்சியில் சங்கரர் மடம் ஏற்படுத்தவேயில்லை என்பதுதான் உண்மை. இந்த யாதாஸ்து அன்று D V.A. தேவசேனுபதியால் அச்சுப்போடுவதினின்றும் கை விடப்பட்டது. அனுபந்தம் 51 ஐ பார்க்கவும். இப்பொழுது 1974ம் வருஷத்தில் சுப்ரீம் கோர்ட்டு தீர்ப்பை கும்பகோணம் மடத்தார் அனு சரிக்க வேண்டி வருவதால் Dr. V.A. தேவ சேனுபதி கைவிட்ட பணியை, Dr.வீழிநாதன் ஏற்றுக்கொண்டு மேற்படி யாதாஸ்தையே ஆதாரமாக வைத்து, மாலா பத்திரிகையில் கட்டுரை வெளியிட்டிருக் கிருர் என்று ஊகிக்க இடமளிக்கிறது. (ஒருக்கால் மேற்படி யாதாஸ் தை Dr. வீழிநாதன் அச்சுப்போடுவது என்ற தீர்மானம் செய்தால் அதற்கு சர்க்காரோ, யுனிவர்ஸிடியோ பங்கு கொள்ளமாட்டார்க ளென நம்பப்படுகிறது.) மேலும் மாலா பத்திரிகை ஆசிரியரும் இசைந்து Dr வீழிநாதனுடைய கல்பனுகட்டுரையை, தன் பத்திரிகை யில் அச்சுப்போட்டு விளம்பரம் செய்ததன் மூலம், இவ்வளவு ஆழ்ந்து கவனிக்காமல் அஜாக்ரதையோடு பிரசுரம் செய்வதற்கு, அவர் விஷய மாகவும் விசனம்தான் தெரிவிக்க வேண்டியதாக இருக்கிறது.

## X ~~VI~~ கும்பகோணம் மடத்தாரின் ஆக்ரமிப்புகளும், இன்னல்களும்

(a) காலடியில் ஆதிசங்கரர் வசித்த இல்லத்தையே, சிருங்கேரி

மடத்தார் கைப்பற்றி; பூர்ணு நதிக்கரையில் ஒரு சங்கராலயமும்; வித்யாலயமும் ஸ்தாபித்துள்ளார்கள். இவ்விடத்தில் கும்பகோணம் மடத்தார் தர்சனுதிகள் செய்துகொள்ள வாய்ப்பு இருக்கிறது. இதை விட்டுவிட்டு நதிக்கரையிலிருந்து சுமார் 3 கிலோமீட்டருக்கப்பால் கிறிஸ்தவர்களின் கல்லறையை அடுத்து கும்பகோணம் மடத்தார் மடம் கட்டவேண்டிய அவசியமென்ன? போட்டி மனப்பான்மையா? அல்லது தங்களது மடத்தின் கியாதியைப் பெருக்கிக் கொள்வதற்காகவா?

(b) பூரி ஜகன்னுத்தில் ஓர் புராதனமான பூர்வாம்னுய மடம் இருந்து வருகிறது. இவ்விடத்தில் கும்பகோணம் மடத்தாருக்கு ஒரு மடம் தேவையா? நூதனமாக திட்டம் போட்டு, ஆக்ரமித்து பூரியில் மடம் கட்டுவது கல்பிதமான தங்கள் மடத்தின் பெயரை ஓங்கச் செய்யத்தானே?

(c) புராதனப் பிரசித்தி பெற்ற காசியையும், காசி விஸ்வநாதரையும் தெரியாதவர்கள் யார்? இந்தக்காசியில் ''பஞ்சாயதன காமகோடீஸ்வர ஆலயம்'' கட்டியிருப்பதன் கருத்தென்ன? புராண பிரசித்தி வாய்ந்த விஸ்வேஸ்வரர் கோவிலின் கியாதி மங்கி கும்பகோணம் மடத்துக் கோவில் பிரகாசமாக வேண்டுமென்பதுதானே கருத்து? தஞ்சாவூர் டவுனிலும், தஞ்சாவூர் ஜில்லாவிலுமுள்ள ஆலயங்களின் மதில் சுவரிலும், கோபுரங்களிலும் பாசி படர்ந்து செடி கொடிகள் முளைத்து, பூஜைகளில்லாமல் பாழடைந்த ஆலயங்களை பழுது பார்த்து பூஜைகள் சரிவர நடக்க ஏற்பாடு செய்தாலே உயரிய பணியாக ஆகும். சோறிலிருக்கிற கல்லைப் பொறுக்க முடியவில்லை. சொக்கநாதர் கோவில் வரிக்கல்லைப் புரட்டிய கதைபோலல்லவா, காசியில் ஆக்ரமித்து, புது ஆலய நிர்மாணம் செய்வது! காசிக்கு விஸ்வநாதர் கோவில் ஒன்றே போதாதா?

(d) ராமேஸ்வரம், காஞ்சி, மதுரை, கோயமுத்தூர், பங்களூர், காலடி முதலிய இடங்களில் ஏற்கனவே மடங்களிருக்க; கும்பகோணம் மடத்தாரின் ஆக்ரமிப்பும் மட நிர்மாணமும் இவ்விடங்களில் தேவையா? சிருங்கேரியில் கூட கும்பகோணம் மடத்தார் நூதன மடம் கட்ட திட்டமிட்டிருப்பதாகத் தெரிய வருகிறது, ஜனங்களை பிளவு படுத்தவா?

(e) 1959—60ம் வருஷங்களில் சிருங்கேரி ஜகத்குரு தஞ்சாவூர் ஜில்லாவில் யாத்திரை செய்தார்கள். அந்தச்சமயம் அவருடைய யாத்திரைக்கு பற்பல இன்னல்கள் விளைவிக்கப்பட்டன. இதற்கு தனது நேரடியான சம்பந்தம் கிடையாது என கும்பகோணம் ஸ்வாமிகள் இன்று சொல்லக்கூடும். கும்பகோணம் மடம் சிஷ்யர்கள் இன்னல்களைச் செய்தார்கள் என்று கூறினுலும்; தர்ம பிரசாரம் மிகுதியாகச் செய்வதாக பறைசாற்றிவரும் மேற்படி மடம் ஸ்வாமிகளுக்கும் ''சிஷ்ய

பாபம் குரும் வ்ரஜேத் என்ற நியாயப்படி இதில் பங்கு உண்டு.

(f) 1961ம் வருஷத்தில் திருச்சி ஜில்லா நெரூர் கிராமத்தில் அகிலபாரத சங்கர ஸேவா ஸமிதியின் ஆதரவில் சிருங்கேரி சிஷ்யர்கள் மூன்று தினங்களுக்கு வித்வத் சம்மேளனம் நடத்த ஏற்பாடு செய்திருந்தார்கள். ஆரம்ப தினத்திற்கு முன் தினம் மாலை 5 மணிக்கு மேல் கரூர் டி.மு. கோர்ட்டிலிருந்து, இந்த சம்மேளனம் நடத்தக் கூடாது என்று தடை உத்தரவு நிர்வாகஸ்தர்களுக்கு சார்வு செய்யப் பட்டது. இந்த உத்தரவை வாங்குவதற்கு கோர்ட்டில் மனுப்போட்டவர் கரூர் வைத்யர் ராம சர்மா! வழக்கை நடத்துவதற்கு அனுகூலமாயிருந்தவர் குளித்தலை வக்கீல் அண்ணாத்துரை அய்யங்கார். வித்வத் சம்மேளனம் நடைபெறாமல் Rs. 2500/– நஷ்டத்துடன் கலைக்கப் பட்டது. தர்மத்தை ரக்ஷிக்கும் கும்பகோணம் ஸ்வாமிகள் இதற்கு காரணமல்ல என்று இன்று கூறினாலும், ராமசர்மா அன்றே கூறியது என்னவென்றால் கும்பகோணம் ஸ்வாமிகளின் தூண்டுகோலால் வழக்குப் போட்டதாகவும், செலவுகளும் மடத்திலிருந்தே பொருக்கப் பட்டதென்றும் கூறினார்.

(g) சதுர்தாமவேத பவனம் நிர்வாகஸ்தர்கள், சிருங்கேரி மடத்தின் மேற்பார்வையில் ராமேஸ்வரத்தில் ஓர் வேத பாடசாலையை நிறுவி, அதற்கு ஓர் லக்ஷண வித்வானை அத்யாபகராக நியமித்திருக்கிறார்கள். ஆனால் கும்பகோணம் மடத்தார் சிருங்கேரி மடத்திலிருந்து தங்கள் மேற்பார்வைக்கு இந்தப் பாடசாலையை மாற்றும்படியான பல முயற்சிகளை செய்து ஆக்ரமிப்பை விளைவிக்கிறார்கள். அப்படியானால் சிருங்கேரி மடத்தார் எப்படி மேற்பார்க்க முடியும்? இந்த ஆக்ரமிப்பின் கருத்தென்ன?

## XI VII முடிவு

தர்மத்தை ரக்ஷிப்பது இந்தக்கால நிலையில் நமது பொறுப்பாகவே ஏற்பட்டுள்ளது. இதற்கு யாவரும் ஊக்கம் அளிக்கவேண்டிய அவசியமாகிவிட்டது. இவ்விஷயத்தில் யாரும் கும்பகோணம் மடத்தார் எடுத்துக் கொண்ட முயற்சிகள் மிகவும் போற்றத் தகுந்ததே. இவ்விஷயத்தில் யாரும் இம்மடத்தாரை குறை சொல்வதற்கில்லை. ஆனாலும் ஆதி சங்கரரின் வழியில் வந்ததாகவே கூறிக்கொள்ளும் நாம் யாவரும், அவரிட்ட சம்பிரதாயத்துக்கு மதிப்புக் கொடுக்க வேண்டியவர்களாகவே இருக்கிறோம். அந்த சம்பிரதாயத்துக்கு உட்பட்டு, ஒருமைப்பாடு அடைந்து, தர்மபிரசாரத்தை சந்தர்ப்பத்துக்கும் இடத்துக்கும் ஏற்ற நிலைமையில் இன்னவிதமாய்ச் செய்வது என்ற வியவஸ்தையுடன் செய்தால், குருமார்களுக்கும், சிஷ்யர்களுக்கும் தொல்லையில்லாது இருக்கும். சம்பிரதாயத்திற்கு விருத்தமாக தன்னை உயர்த்திக் கொள்வதற்காகச் செய்யப்படும் தர்ம ப்ரசாரம் ராஜஸமாக ஆகுமே தவிர ஸாத்விகமானதாக ஆகாது.

நூதனமான கல்பனைகளைப் பிரசாரம் செய்வதும்' இதற்கு கண்டன பிரசாரங்களும்தான் மிஞ்சுகிறதே தவிர, தர்மப்ரசாரம் ஒரு வ்யாஜம் என்ற நிலைமையை ஏற்படுத்திவிடுகிறது. அவரவர்களுடைய நிலையும், அவரவர்களுடைய அந்தஸ்தும் அப்படியே இருந்தும், ஒருவருடைய அந்தஸ்திற்கு மற்றொருவர் ஆசைப்படாமலும் தர்ம ப்ரசாரம் செய்து வந்தால் அதுவே அந்தந்த மடத்துக்குப் பெருமையையும், சிறப்பையும் ஏற்படுத்தி வைக்கும். ஆதிசங்கரர் காஞ்சியில் மடம் ஏற்படுத்தவில்லையென்பது உண்மை. தஞ்சாவூரில் உற்பத்தியாகி, பின் கும்பகோணம் மடமாகி, அதன் பிறகு இப்பொழுது சில காலமாக காஞ்சி மடமாக விளங்குகிறது என்பதும் உண்மை. விரோதமனப்பான்மையோ, போட்டி மனப்பான்மையோ மடங்களுக்குள் ஏன் ஏற்படவேண்டும்? இவ்விடத்தில் கல்கி 26—10—75ம் தேதி இதழில் 9ம் பக்கத்தில் கும்பகோணம் ஸ்வாமிகள் கூறியதாக பிரசுரிக்கப்பட்டதை கீழே காட்டப்படுகிறது.

"தன்னைக்கடைத்தேற்றிக் கொண்டவன் தான் மற்றவர்களைக் கடைத்தேற்ற முடியும். என்னை நம்பிக்கொண்டிருப்பவர்கள் நீங்கள். நான் முழுக்க சரியாகாமல், என்னை நம்பிக்கொண்டிருப்பவர்களிடம் குறை கூறிப் பிரயோசனமில்லை. சாஸ்திரத்தில் சொன்னமாதிரி முதலில் நான் சரிபண்ணிக்கொள்ளப் பார்க்கிறேன். இதில் ஜயித்தேனானால் அப்புறம் உங்களை சரிபண்ணுகிற காரியம்" ஜகத்துதான் தனக்கு குரு என்று மிக விநயத்தோடு கூறிக்கொண்ட கும்பகோணம் ஸ்வாமிகளுக்கு, சாஸ்திர முறையை அனுசரித்து தான் திருந்திக் கொள்வதற்காக, இந்தப் புஸ்தக ஆரம்பத்தில் மஹாபாரதத்தில் கூறிய சில உபதேசங்களையும் ஞாபகமூட்டப்படுகிறது. இந்த உபதேசங்களை தானும் சரிவர கடைப்பிடிப்பதோடு, தன்மடத்து சிஷ்யர்களுக்கும் ஸத்யத்திற்கு முரணாக எழுத வேண்டாம் என்று உபதேசம் செய்துவிட்டால் உலகம் திருந்தி க்ஷேமமடைந்துவிடும் என்று கூறிக்கொண்டு இந்த புஸ்தகம் மடாதிபதிகளுக்கும் சிஷ்யர்களுக்கும் உண்மை விளங்குவதற்காக ஸமர்ப்பிக்கப்படுகிறது.

सत्यमेव परं ब्रह्मसत्यरूपो जनार्दनः । लोकाः समस्ताः सुखिनो भवन्तु ॥

ஸ்ரீ சிருங்கேரி சிஷ்யர்கள்,

மதுரை.

அநுபந்தம் 1

## மடாம்நாய ஸ்தோத்ரம்

சதுர் திக்ஷு ப்ரஸித்தாஸு ப்ரஸித்யர்த்தம் ஸ்வ நாமத: | சதுரோ S த மடான் க்ருத்வா சிஷ்யான் ஸ்ம்ஸ்தாபயத் விபு : || 1
சகார ஸம்ஞ்ஞாமாசார்ய: சதுர்ணாம் நாமபேதத : | க்ஷேத்ரம் ச தேவதாம் சைவ சக்திம் தீர்த்தம் ப்ருதக் ப்ருதக் || 2
ஸம்ப்ரதாயம் ததாம்நாய பேதம் ச ப்ரம்ஹசாரிணாம் | எவம் ப்ரகல்பயா மாஸலோகோப கரணாயவை || 3
திக்பாகே பஸ்சிமே க்ஷேத்ரம் த்வாரகா காளிகாமட: | கிடவால: ஸம்ப்ரதாய: தீர்த்தாச்ரம பதே உபே || 4
தேவ: ஸித்தேச்வர : சக்திர் பத்ரகாளிதி விச்ருதா | ஸ்வரூப ப்ரம்ஹசார்-யாக்ய ஆசார்ய : பத்மபாதக : || 5
விக்யாதம் கோமதி தீர்த்தம் ஸாமவேதஸ்ச தத்கதம் | ஜீவாத்மப மாத்மைக்ய போதோ யத்ர பவிஷ்யதி || 6
விக்யாதம் தன்மஹா வாக்யம், வாக்யம் தத்வமஸீதிச | த்விதிய : பூர்வதிக்-பாகே கோவர்த்தன மட : ஸ்ம்ருத: || 7
போகவால : ஸம்ப்ரதாய : தத்ராரண்ய வநே பதே | தஸ்மிந்தேவோ ஜகந்நாத:புருஷோத்தம ஸம்ஞித : || 8
க்ஷேத்ரம் ச வ்ருஷலாதேவி ஸர்வலோகேஷு விச்ருதா | ப்ரகாச ப்ரம்ஹ சாரீதி ஹஸ்தாமலகஸம்ஞித: || 9
ஆசார்ய : கதிதஸ்தத்ர நாம்நா லோகேஷு விச்ருத : | க்யாதம் மஹோ ததிஸ் தீர்த்தம் ரிக்வேத : ஸமுதாஹ்ருத: || 10
மஹா வாக்யம் ச தத்ரோக்த ப்ரஞ்ஞானம் ப்ரஹ்ம சோச்யதே | உத்தாஸ் யாம் ஸ்ரீ - மட : ஸ்யாத் க்ஷேத்ரம் பதரிகாச்ரம : || 11
தேவோ நாராயணோ நாம சக்தி: பூர்ணகிரீதிச | ஸம்ப்ரதாயோ நந்தவால: தீர்த்தம் சாளகநந்திகா || 12
ஆனந்தப்ரம்ஹசாரீதி கிரிபர்வத ஸாகரா : | நாமானி தோடகாசார்யோ வேதோ S தர்வணஸம்ஞிக: 13
மஹாவாக்யம் ச தத்ராயமாத்மா ப்ரம்ஹேதி கீர்த்யதே | துரீயோ தக்ஷிணஸ்யாம் சச்ருங்கேர்யாம் சாரதாமட : || 14
மலஹானிகரம் லிங்கம் விபாண்டக ஸுபூஜிதம் | யத்ராஸ்தே ரிஷ்யச்ருங்கஸ்ய மஹர்ஷோராச்ரமோ மஹான் || 15
வாராஹோ தேவதா தத்ர ராமக்ஷேத்ரமு தாஹ்ருதம் | தீர்த்தம் ச துங்க பத்ராக்யம் சக்தி : ஸ்ரீசாரதேதிச || 16
ஆசார்யஸ்தத்ர சைதன்ய ப்ரம்ஹசாரீதி விச்ருத : | வார்த்திகாதி ப்ரம்ம வித்யா கர்த்தாயோ முனிபூஜித: || 17
ஸுரேச்வராசார்ய இதி ஸாக்ஷாத் ப்ரம்ஹாவதாரக : | ஸரஸ்வதி புரீசேதி பாரத்யாரண்ய தீர்த்த கௌ || 18
கிர்யாச்ரமமுகாவிஸ்யு: ஸர்வநாமானி ஸர்வதா | ஸம்ப்ரதாயோ பூரி வாலோ யஜுர்வேத உதாஹருத : || 19
அஹம்ப்ரம்ஹாஸ்மீதி தத்ர மஹாவாக்ய–முதீரிதம் | சதுர்ணாம் தேவதா

சக்தி க்ஷேத்ரநாமான்யனுக்ரமாத் ॥ 20

மஹாவாக்யானி வேதாம்ஸ்ச ஸர்வமுக்தம் வ்யவஸ்தயா | இதி ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜக பூபதே : ॥ 21

ஆம்நாயஸ்தோத்ர படனதிஹாமுத்ர ச ஸத்கதிம் | ப்ராப்யாந்தே மோக்ஷமாப்நோதி தேஹாந்தே நாத்ர ஸம்சய : ॥ 22

ஸ்ரீமத் சங்கர பகவத்பாதாசார்ய விரசித ஆம்நாய ஸ்தோத்ரம் ஸம்பூர்ணம் ॥

## அனுபந்தம் 2

## மடாம்நாய ஸேது

*த்ருஷ்டிகோசர ஆம்நாயா : சத்வார :*

1 ப்ரதம: பஸ்சிமாம்நாய : சாரதாமட உச்யதே
கீடவார : ஸம்ப்ரதாய : தஸ்யதீர்த்தாச்ரமௌசுபௌ ॥

2 த்வாரகாக்யம் ஹி க்ஷேத்ரம் ஸ்யாத்தேவ : ஸித்தேச்வர: ஸ்ம்ருத:
பத்ரகாளீதுதேவீஸ்யா தாசார்யோ விச்வரூபக : ॥

3 கோமதீதீர்த்தமமலம் ப்ரம்ஹசாரி ஸ்வரூபக :
ஸாமவேதஸ்ய வக்தாச தத்ர தர்மம் ஸமாசரேத் ॥

4 பூர்வாம்நாயோ த்விதியஸ்யாத்கோவர்த்தனமட : ஸ்ம்ருத :
போகவார : ஸம்ப்ரதாயோ வனரண்யே பதேஸ்ம்ருதே ॥

5 புருஷோத்தமம் து க்ஷேத்ரம்ஸ்யாத் ஜகன்னதோஸ்ய தேவதா
விமலாக்யா ஹி தேவீ ஸ்யாத் ஆசார்ய : பத்மபாதக : ॥

6 தீர்த்தம் மஹோததி : ப்ரோக்தம் ப்ரம்மசாரீ ப்ரகாசக :
ரிகாஹ்வயஸ்தஸ்யவேத : தத்ர தர்மம் ஸமாசரேத் ॥

7 த்ருதீயஸ்தூத்தராம்னயோஜ்யோதிஷ்மான் ஹி மடோபவேத்
ஆனந்த வாரோ விஞ்ஞேய : ஸம்ப்ரதாயோ ऽஸ்ய ஸித்திக்ருத் ॥

8 பதானி தஸ்யாக்யாதானி கிரிபர்வத ஸாகரா:
பதரிகாச்ரம: க்ஷேத்ரம் தேவதா ச ஸ ஏவ ஹி ॥

9 தேவீ புந்நாகிரீ ஞேயா ஆசார்யஸ்த்ரோடக : ஸ்ம்ருத :
தீர்த்தம் த்வலகநந்தாக்யம் நந்தாக்யோ ப்ரஹ்மசார்யபூத் ॥

10 தஸ்யவேதோஹ்யதர்வாக்ய : தத்ரதர்மம் ஸ்மாசரேத்
சதுர்த்தோ தக்ஷிணாம்நாய : ச்ருங்கேரீ து மடம் பவேத் ॥

11 பூரிவாராஹ்வயஸ்தஸ்ய ஸம்ப்ரதாயஸ்ஸுசோபன:
பதானி த்ரீணி க்யாதானி ஸ்ரஸ்வதி பாரதி புரீ ॥

12 ராமேச்வராஹ்வயம் க்ஷேத்ரமாதி வாராஹதேவதா
காமாக்ஷி தஸ்யதேவி ஸ்யாத் ஸர்வ காம பல ப்ரதா ॥

13 ப்ருத்விதராஹ்வ ஆசார்யஸ் துங்க பத்ரேதி தீர்த்தகம்
சைதன்யாக்யோப்ரம்மசாரீ யஜுர்வேதஸ்ய பாடக : ॥

14 உக்தாஸ் சத்வார ஆம்நாயா : யதினாம் ஹி ப்ருதக் ப்ருதக்
தேஸர்வே சதுராசார்ய நியோகேன யதாவிதி ॥

15 ப்ரயோக்தவ்யா : ஸ்வதர்மேஷு சாஸ்னியாஸ்ததோ ऽன்யதா
குர்வந்த ஏவஸ்நதம் அடனம் தரணி தலே ॥

16 விருத்தா சாரஸம்ப்ராப் தாவாசார்யாணாம் ஸமாஞ்ஞயா

லோகான் ஸம்சிலயந்த்வேவ ஸ்வதர்மாப்ரதிரோதத:

17 ஸிந்து ஸௌவீர ஸௌராஷ்ட்ர மஹாராஷ்ட்ராஸ் ததாந்தரா: |
தேசா: பஸ்சிம திக்ஸ்தா: யே சாரதாபீட ஸாத்க்ருதா: ||

18 அங்க வங்க கலிங்காஸ்ச மகதோத்கல பர்பரா: |
கோவர்த்தன மடாதீனு: தேசா: ப்ராசீ வ்யவஸ்திதா:

19 ஆந்த்ர-த்ரவிட-கர்னுட-கேரளாதி ப்ரபேதத: |
ச்ருங்கேர்யதீனு தேசாஸ்தே ஹ்யவாசீ திகவஸ்திதா: ||

20 குரு காச்மீர காம்போஜ பாஞ்சாலாதி விபாகத: |
ஜ்யோதிர் மட வசா தேசா ஹ்யுதீசீ திகவஸ்திதா: ||

21 மர்யாதைஷா ஸுவிஞ்ஞேயா சதுர்மட விதாயினீ |
தாமேதாம் ஸமுபாச்ரித்ய ஆசார்யா: ஸம்பிரதிஷ்டிதா: ||

22 ஸ்வ ஸ்வ ராஷ்ட்ர ப்ரதிஷ்டித்யை ஸஞ்சார: ஸுவிதீயதாம்
மடேது நியதம் வாஸ: ஆசார்யஸ்ய நயுஜ்யதே ||

23 வர்ணுச்ரம ஸதாசாரா: அஸ்மாபிர்யே ப்ரஸாதிதா:
ரக்ஷணீயாஸ்த ஏவைதே ஸ்வே ஸ்வே பாகே யதாவிதி ||

24 யதோ விநஷ்டிர் மஹதீ தர்மஸ் யாத்ர நஜாயதே | |
மாந்த்யம் ஸந்த்யாஜ்யமேவாத்ர தாக்ஷ்யமேவ ஸமாச்ரயேத் ||

25 பரஸ்பர விபாகேஷு ப்ரவேசோ ந கதாசன |
பரஸ்பரேண கர்த்தவ்ய: ஆசார்யேண வ்யவஸ்திதி: ||

26 மர்யாதாயா: விநாசேன லுப்யேரந்நியமா: சுபா: | |
கலஹாகாரஸம்பத்தி ரதஸ் தாம் பரிவர்ஜ யேத் ||

27 பரிவ்ராடார்ய மர்யாதோ மாமகீனும் யதாவிதி |
சது: பீடாதிகாம் ஸத்தாம் ப்ரயுஞ்ஜ்யாச்ச ப்ருதக் ப்ருதக் ||

28 சுசிர் ஜிதேந்த்ரியோ வேத-வேதாங்காதி விசாரத:
யோகஞ்ஞ: ஸர்வதந்த்ராணும் அஸ்மதாஸ்தான மாப்நுயாத் ||

29 உக்த லக்ஷண ஸம்பன்ன: ஸ்யாச் சேந்மத் பீடபாக் பவேத் |
அன்ய தாऽऽரூட பீடோऽபி நிக்ரஹார்ஹோ மனீஷிணும் ||

30 ஏக ஏவா பிஷேச்யஸ்யாதந்தே லக்ஷண ஸம்மத: |
தத்தத் பீடே க்ரமேணைவ நபஹுர் யுஜ்யதே க்வசித் ||

31 அஸ்மத் பீடே ஸமாரூட: பரிவ்ராடுக்த லக்ஷண:
அஹமேவேதி விஞ்ஞேய: "யஸ்ய தேவே" இதி ச்ருதே: ||

32 ஸுதன்வன: ஸமௌத்ஸிக்ய நிர்வ்ருத்யை தர்மஹேதவே |
தேவராஜோப சாராம்ஸ்ச யதாவதனு பாலயேத் ||

33 கேவலம் தர்மமுத்திச்ய விபவோ பாஹ்ய சேதஸாம்.
விஹிதஸ் சோபகாராய பத்மபத்ரநயம் வ்ரஜேத் ||

34 ஸுதன்வா ஹி மஹாராஜ: ததன்யே ச நரேச்வரா:
தர்ம பாரம்பரீமேதாம் பாலயந்து நிரந்தரம் ||

35 ப்ரஹ்ம க்ஷத்ரகுலே பூத்வா பாரதீ பீட வஞ்சக:
பாரர்த்தாச் ச்யவதே சாந்தே பைசாசீம் யோனி மாப்னுயாத் ||

36 சாரதாமட ஆசார்ய ஆச்ரமாக்யோ பஹூத்தம:
கோவர்த்தனஸ்ய விஞ்ஞேயோऽரண்யநாமா விசக்ஷண:

37 ஜ்யோதிர் மடஸ்ய ஸததம் பர்வதாக்யோ நிகத்யதே
ச்ருங்க பேர மடே நித்யம் பாரதீ பஹு பாவன: ||

38 நிர்ணயோ ஸௌ ஸுவிஞ்ஞேய: சதுஷ் பீடாதிகாரிணு
நாத்ர வ்யத்யய ஆதேய: கதாசிதபி சீலிநு ||

39 மடாஸ் சத்வார: ஆசார்யாஸ் சத்வாரஸ்ச துரந்தரா:
ஸம்ப்ரதாயாஸ்ச சத்வார ஏஷா தர்ம வ்யவஸ்திதி: |

40 சாதுர் வர்ண்யம் யதாயோகம் வாங்மன: காய கர்மபி:
குரோ: பீடம் ஸமர்ச்சேத விபாகானுக்ரமேண வை

41 தராமாலம்ப்ய ராஜான: ப்ரஜாப்ய: கரபாகின:
க்ருதாதிகாரா ஆசார்யாத் தர்மத: தத்வதேவ ஹி ||

42 தர்மோ மூலம் மனுஷ்யாணும் ஸ சாசார்யாவலம்பன:
தஸ்மாதாசார்யஸுமணே: சாஸனம் ஸர்வதோऽதிகம்

43 ஆசார்யா க்ஷிப்த தண்டாஸ்து க்ருத்வா பாபானி மானவா:
நிர்மலா: ஸ்வர்க மாயாந்தி ஸந்த: ஸுக்ருதினோ யதா

44 தாவாசார்யோப தேசஞ்ச ராஜதண்டஞ்ச பாலயேத்
தஸ்மாதாசார்ய ராஜானு வனவத்யௌ ந நிந்தயேத் ||

45 இத்யேவம் மனுரப்யாஹ கௌதமோऽபி விசேஷத:
விசிஷ்ட சிஷ்டா சாரோऽபி மூலாதேவ ப்ரஸித்யதி ||

46 தஸ்மாத் ஸர்வ ப்ரயத்னேன சாசனம் ஸர்வ ஸம்மதம்
ஆசார்யஸ்ய விசேஷேண ஹ்யௌதார்ய பர பாகிண:

47 தர்ம பத்ததிரேஷாஹி ஜகத: ஸ்திதி ஹேதவே
ஸர்வ வர்ணுச்ரமாணும் ஹி யதாசாஸ்த்ரம் விதீயதே

48 க்ருதே விச்வகுருர் ப்ரம்ஹா த்ரேதாயாம் ரிஷி ஸத்தம:
த்வாபரே வ்யாஸ ஏவஸ்யாத் கலாவத்ர பவாம்யஹம் ||

இதி ஸ்ரீமத் பரம ஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய ஸ்ரீமத் சங்கர பகவத்பாத க்ருதௌ மடாம்நாயாஸ் சத்வார: ஸமாப்தா:

---

## அனுபந்தம் 3
## மடாம்நாயோபநிஷத் !
## ஓம் ஸ்ரீரஸ்து

ஓம்! ஊர்த்வாம்நாய குருபதேச புவனுகார ஸிம்ஹாஸன ஸித்தாசார வந்திதம் ஸமஸ்த வேத வேதாந்த ஸார நிர்மாணம் பராத்பரம் நிரஞ்ஜன ஞானர்த்த ஷட்சக்ர ஜாக்ரதீமயம் பராவாசா பராத்பரம் ஸர்வ ஸாக்ஷி த்ருதம் சின்மயம் ஜ்யோதிர்லிங்கம் நிராகாரம் களிதம் பூர்ண ப்ரபா சோபி தம் சாந்தம் சந்த்ரோதய நிபம் பஜ மன: தச் ஸ்ரீகுரு சைதன்யம் ப்ரண மாமி | அகண்ட மண்டலாகாரம் வ்யாப்தம் யேன சராசரம் | தத்பதம் தர்சிதம் யேன தஸ்மை ஸ்ரீ குரவே நம: ||

I ஓம்! ப்ரதமே பஸ்சிமாம்நாய: சாரதா மட: கீடவாரி ஸம்ப்ரதாய: தீர்த்தாச்ரம பதம் த்வாரகா க்ஷேத்ரம் ஸித்தேச்வரோ தேவ: பத்ரகாளீ தேவீ ப்ரம்ஹஸ்வருபாசார்ய: கங்கா கோமதீ தீர்த்தம் ஸ்வருப ப்ரம்ஹ சாரீ ஸாமவேத ப்ரபடனம் "தத்வமஸி" இத்யாதி வாக்விசார: நித்யா நித்ய விவேகேன ஆக்மனுபாஸ்திம் ஆத்மதீர்த்தே ஆத்மோத்தாரார்த்தே ஸாக்ஷாத்காரார்த்தே ஸன்யாஸ க்ரஹணம் கரிஷ்யே | ஓம் நமோ நாரா யணுயேதி ||

II ஓம்! த்விதீயே பூர்வாம்நாய: கோவர்த்தன மட: போகவாரி ஸம்ப்ரதாய: வனுரண்யே, பதே, புருஷோத்தமம் க்ஷேத்ரம் ஜகன்னுத: விமலாதேவீ பத்ர பத்மபாதாசார்ய: மஹோததி தீர்த்தம், ப்ரகாச ப்ரம்ஹசாரீ ரிக்வேத: ப்ரபடனம் தமேவைக்யம் ஜானத "ப்ரஞ்ஞான மானந்தம் ப்ரம்ஹ" இத்யாதி வாக்ய விசார; நித்யா நித்ய விவேகேன ஆத்மனுபாஸ்திம் ஆத்ம தீர்த்தே ஆத்மோத்தாரார்த்தே ஸாக்ஷாத்கா ரார்த்தே ஸன்யாஸ க்ரஹணம் கரிஷ்யே || ஓம் நமோ நாராயணுயேதி ||

III ஓம்! த்ரிதியே உத்தராம்னுய: ஜ்யோதிர் மட: ஆனந்த வாரி ஸம் ப்ரதாய: கிரி பர்வத ஸாகர பதானி, பதரிகாச்ரம க்ஷேத்ரம் நாராயணு தேவதா பூர்ணகிரீ தேவீ த்ரோடகாசார்ய: அலகநந்தா தீர்த்தம் ஆனந்த ப்ரம்ஹசாரீ அதர்வண வேதபடனம் தமேவைக்யம் ஜானத "அயமாத்மா ப்ரம்ஹ" இத்யாதிவாக்ய விசார: நித்யாநித்ய விவேகேன ஆத்மோபாஸ்திம் ஆத்ம தீர்த்தே ஆத்மோத்தாரார்த்தே ஸாக்ஷாத்காரார்த்தே ஸன்யாஸ க்ரஹணம் கரிஷ்யே || ஓம் நமோ நாராயணுயேதி ||

IV ஓம்! சதுர்த்தே தக்ஷிணும்நாய: ச்ருங்கேரீ மட: பூரிவாரி ஸம்ப்ர தாய: ஸரஸ்வதி பாரதி புரீ சேதி பதானி ராமேச்வர க்ஷேத்ரம்

ஆதிவராஹோ தேவதா காமாக்ஷி தேவீ ச்ருங்கி ரிஷி: ப்ருத்வீதரா சார்ய: துங்கபத்ரா தீர்த்தம் சைதன்ய ப்ரம்ஹசாரி யஜுர்வேத ப்ரபடனம், தமே வைக்யம் ஜானத "அஹம் ப்ரம்ஹாஸ்மி" இத்யாதி வாக்ய விசார: நித்யா நித்ய விவேகேனுத் மனேபாஸ்திம் ஆத்ம தீர்த்தே ஆத்மோத்தாரார்த்தே ஸாக்ஷாத்காரார்த்தே ஸன்யாஸக்ரஹணம் கரிஷ்யே || ஓம் நமோ நாராயணயேதி ||

V ஓம்! பஞ்சமே ஊர்த்வாம்னய: ஸுமேரு மட: காசி ஸம்ப்ரதாய: ஜனக யாஞ்ஞவல்க்யாதி சுகவாம தேவாதி ஜிவன்முக்தா:ஏதத்ஸனக ஸனந் தன கபிலநாரதாதி ப்ரம்ஹ நிஷ்டா: நித்ய ப்ரம்ஹசாரி கைலாஸ க்ஷேத்ரம் மானஸஸரோவரம் தீர்த்தம் நிரஞ்ஜனே தேவதா மாயா தேவீ ஈச்வரா சார்ய: அனந்த ப்ரம்ஹசாரீ சுகதேவ வாமதேவாதி ஜிவன்முக்தானும் ஸுஸம் வேதபடனம் பரோரஜஸே ஸாவதோம் "ஸம்ஞானமனந்தம் ப்ரம்ஹ" இத்யாதி வாக்ய விசார: நித்யா நித்ய விவேகேன ஆத்மனே பாஸ்திம் ஆத்மதீர்த்தே ஆத்மோத்தாரார்த்தே ஸாக்ஷாத்காரார்த்தே ஸன்யாஸ க்ரஹணம் கரிஷ்யே || ஓம் நமோ நாராயணயேதி ||

VI ஓம்! ஷஷ்டே ஆத்மாம்னய: பரமாத்மா மட: ஸத்ய ஸுஸம்ப்ர தாய: நாபிகுண்டலி க்ஷேத்ரம்
த்ரிகுடீதீர்த்தம் ஹம்ஸோ தேவீ பரமஹம்ஸோ தேவதா அஜபா ஸோSஹம் மஹாமந்த்ர: ப்ரம்ஹ விஷ்ணு மஹேச்வராத்யா: ஜீவ ப்ரம்மஹசாரி ஹம்ஸவித உபாஸ்தி: உபாதிபேத ஸன்யாஸார்த்தம் ஞானஸன்யாஸ க்ரஹணம் கரிஷ்யே || ஓம் நமோ நாராயணயேதி ||

VII ஓம்! ஸப்தமே ஜம்பூத்வீப: ஸம்யக்ஞானம் சிகா ந ஸூத்ரம் வேத்ய வேதக: ச்ரத்தா நதி விமலாதீர்த்தம் ஆத்மலிங்க சாந்த்யர்த்தே விசார; நித்யா நித்ய விவேகேன ஆத்மனேபாஸ்திம் ஆத்மதீர்த்தே ஆத்மோத்தாரார்த்தே ஸாக்ஷாத்காரார்த்தே ஸன்யாஸ க்ரஹணம் கரிஷ் யே || ஓம் நமோ நாராயணயேதி ||

"ஓம் தத் ஸத் ப்ரம்ஹார்ப்பண மஸ்து || இதி ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய ஸ்ரீமச் சங்கராசார்ய விரசிதா மடாம்னயோபநிஷத் ஸமாப்தா ||

---

குறிப்பு:- ஒன்று முதல் நான்கு முடிய கூறப்பட்ட மடங்கள் மட்டிலும் த்ருஷ்டி கோசரமான மடங்கள், நம் பாரதவர்ஷத்தில் உள் ளவை. மற்ற மூன்றும் ஞான கோசரமான மடங்கள் நம் கண்ணுக்கு புலப்படாதவை.

# அனுபந்தம் 4

## நைஷதத்தில் ப்ராந்தி நிரஸனம்

ஸ்ரீஹர்ஷர் செய்த நைஷத மஹாகாவ்யத்தில் 12-வது ஸர்கம் 38 வதுச்லோகம்:- ஸிந்தோர்ஜைத்ரமயம் பவித்ரமஸ்ருஜத்தத் கீர்த்தி பூர்தாத்புதம் யத்ரஸ்நாந்திஜகந்தி, ஸந்திகவய: கேவா-ந-வாசம்யமா: யத்பிந்துச்ரியம் இந்து ரஞ்சதிஜலம்சாவிச்ய. த்ருச்யேதரோயஸ்யா ஸௌஜலதேவதாஸ்படிகபூர் ஜாகர்ந்தியாகேச்வர: ‖ இந்தச்லோகமானது தமயந்தீஸ்வயம்வரத்தில் தமயந்தியைப் பார்த்து காஞ்சீ தேச மன்னனைக்குறித்து, ஸரஸ்வதியினுல் சொல்லப்பட்டது. இந்த ச்லோகத்தில் யாகேச்வரர் என்ற பதமே இராமேச்வரம் முதல் பனிமலை வரைபார்க்குமளவில் மூலக்ரந்தங்களில் பார்க்கப்படுகிறது. உறையாசிரியர்கள் வெவ்வேறு தேசத்தவர்களும் வெவ்வேறு காலத்தைச் சேர்ந்தவர்களுமான 23-பண்டிதர்களுமான மஹா மஹா பண்டிதர்களும் கூட முரணுன கருத்தில்லாமலேயே, யாகேச்வரபதத்திற்கே உறை கூறியிருக்கிருர்கள். யோகேச்வரர் என்ற பதமானது தேடிப்பார்த்தும் ஒரு புஸ்தகத்திலும் கிடைக்கவில்லை. மேலும் யாதேனும் ஒரு உறையாசிரியரும்கூட யோகேச்வர் என்று கருதி உறைகூறவில்லை. அதனுலேயே, யாகேச்வரர் என்ற பதத்தை இப்பொழுது விரோதமற்ற முறையில் நாங்கள் பார்க்கிருேம். மேலும் நாங்கள் நினைப்பது யோகேச்வரர் என்ற பதகல்பனையானது தவருன கல்பனை. அதற்கு உறைபோல் (1973 கல்கீ தீபாவளி மலரில் காஞ்சீ காமகோடி சங்கராச்சாரியார் என்று கூறிக்கொள்ளுபவர்) அவர். கட்டுரையில் கூறி இருப்பதும் குற்றமுள்ள உறையே ஆகும்.

கையொப்பங்கள் :

1 வே. சு. ராமச்சந்திர சாஸ்திரிகள், சங்கரமடம் பெங்களூர்-4.
2 கோல்லபுரி. கோபாலகிருஷ்ண சாஸ்திரிகள், சாரதாபீடம் ச்ருங்கேரி.
3 பேரி. சூர்யநாராயண சாஸ்திரிகள், ராஜமஹேந்திரி.
4 வங்க வேங்கடசுப்ரமண்ய சாஸ்திரிகள், சிலப்பதி.
5 பி. கே. நாகரத்னசர்மா, திருச்சி.
6 பி. நாராயண நம்பூதிரி, திருப்பணித்துரை.
7 டி. தாமோதர பிஷாரடி ஷை
8 கே. என். எம். திவாகரன் நம்பூதிரி ஷை
9 டி. ராமவாரியார் ஷை

10 கே. கிருஷ்ண ஜோஸ்யர் பெங்களூர்.

11 எஸ். நீலகண்ட சாஸ்திரிகள், திருவனந்தபுரம்.

12 எஸ். எஸ். கிருஷ்ண சாஸ்திரிகள், காலடி.

13 ஸந்நிதானம். லக்ஷ்மீநாராயண சாஸ்திரிகள், செகந்திராபாத்.

14 ராமசந்த்ரு, கோடேச்வரசர்மர, திம்மஸமுத்ரம்,
பிரகாசமண்டலம்.

15 வை. விச்வநாத சாஸ்திரிகள், தும்கூர்.

16 வஸந்தராமகாட்கீல், நிருபர், சாரதா பத்திரிகை, புனா-30.

17 க, கோ. பாடகர். விசேஷ ஆசிரியர். சீதாகோவிந்தஸ்மார்த்த
யாக்ஞிக பாடகசாலா புனா-30.

18 டி. ராமசர்மா—ச்ருங்கேரி.

19 மல்லாவஜல. வேங்கடசுப்ரம்ஹண்ய சாஸ்திரிகள், வரங்கல்.

20 பீ. எம். சங்கரன். நம்பூதிரிபாட். லக்கடி.

21 ருத்ரப்ரஸாத அவர்ஸ்தா பூ4, பு1-ஸம்ஸ்க்ருதத்ரிபாக,
அத்யக்ஷகர், லக்ஷ்மணபுரீ.
(ஸம்மானித-ப்ரா. ஸ். ஸம். வி. வாராணஸீவிச்வ வித்யாலயம்.

22 சாலிக்ராம மிச்ரர் வாராணஸீயில் வியாகரணவிபாக அத்யக்ஷகர்
ஸ்ரீ சாதுவேலாஸம், ம, வித்யாலயம், ஸகரகந்த கேலீ,
வாராணஸீ-9.

23 ஸ்ரீமாதவ சரண் உபாத்யாயர், அத்யக்ஷகர் தபோவன. ஸம், ம,
வித்யாலயம்

24 எம். எஸ். சங்கர கனபாடிகள், மேல்மங்கலம்

25 கே, ராமச்சந்திர ஸோமயாஜீ, ஓய்வுபெற்ற விசேஷ அத்யக்ஷகர்
மைசூர்

26 என். வெங்கடசுப்பாவதானீ, மைசூர்

27 என். லக்ஷ்மீநாராயண ச்ரௌதிகள் ப்ரொபெஸர் ஆப்
சாமவேதம் மஹாராஜா ஸம்ஸ்க்ருத காலேஜ், மைசூர்

28 கே. காசி கனபாடிகள், T—நகர், மதருஸ்—17.

29 பி. ராமபட்டர், சங்கரமடம், பெங்களூர்—4.

30 என். டி. ஸ்ரீநிவாஸ ஐயங்கார், ப்ரொபெஸர் ஆப் வியாகரணம்
ஸ்ரீசாமராஜேந்திரஸம்ஸ்க்ருத காலேஜ், பெங்களூர்-18.

31 வி. எஸ். இந்த்ரம்மா, M A., வியாகரணவிதுஷி, ஸம்ஸ்க்ருதப்ர
சார கார்யாலயம், சங்கரபுரம். பெங்களூர்-4.

32 எம். வி. நரஸிம்ஹமூர்த்தி, வியாகரணவித்வான் ஸ்ரீமடம்,
ச்ருங்கேரி.

33 எம். ராமசுப்ரஹ்மண்ய அய்யர், 51-சத்யமூர்த்தி தெரு,
திருநெல்வேலி டவுன்.

34 கே. எம். சுப்ரஹ்மண்ய அய்யர், கோமதீ, 22-3-வது கிராஸ்,
ராமகிருஷ்ண நகர், MS-28.

35 T. ராமலிங்கேச்வர ராவ், ஸாஹித்யசக்ரவர்த்தி, 7-பரோடா
தெரு. MS-38. (குடிவாடா, கிருஷ்ணஜில்லா, ஆந்த்ரா.)

36 வித்வான். ராமச்சந்திர சாஸ்திரி, ஸஒரி, கவலக்கி பாஸ்கரி
போஸ்டு, N.K.

37 வேங்கடசுப்பாசாஸ்திரிகள், உபயபாஷா வித்வான்,
கொள்ளேகாலம், மைசூர் ஜில்லா.

38 எஸ். கே. ராமஸ்வாமி அவதானிகள், பிரின்ஸிபல், ஸத்வித்யா
ஸஞ்சீவினீ ஸம்ஸ்க்ருத காலேஜ், ச்ருங்கேரி.

39 மூர்மே. மேனே. ராமபட்டர். ச்ருங்கேரி.

40 கே மஞ்சுநாதசர்மா. ஜோதிஷ வகுப்பு அத்யாபகர், ச்ருங்கேரி.

41 என். வி. சூர்யநாராயண பட்டர், T. நகர், மதுராஸ்-17.

42 வி. கணேசபட்டர், மீமாம்ஸா, வித்வான், ச்ருங்கேரி.

43 விஞயக உருபா, ச்ருங்கேரி.

44 எஸ். ஸித்தநாககுப்ரம்ஹண்ய அய்யர், மதுரை.

45 எம். ஈ. சங்கரநாராயண சர்மா. மதுரை.

46 ஆர். சாஸ்தா, மதுரை

இராக்ஷஸ வருஷம் புரட்டாசி மாதம் சுக்லபக்ஷம் சதுர்த்தி முதல் பௌர்ணமி வரை மேற்கண்டவர்களிடம் கையெழுத்து வாங்கியது.

*M. E. சங்கரநாராயண சர்மா.*



---

## பிழை — திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 11 | 36 முதல் 39 வரை | இந்த குறிப்பை 12-ம் பக்கத்தில் 7-வது வரியில் காணும் "சிக்க உடையார்" என்ற பதத்துக்கு குறிப்பாக படிக்கவும். | |
| 18 | 37 | 1 to 67 | 61 to 67 |
| 20 | 31-31 | அந்த அந்தஸ்து உருவாயின | அந்த அந்தஸ்து உயருவதற்கு ஆனவாய்ப்புகளுக்கு நூதனமாக உருவாயின |
| 20 | 38 | கொவிலுக்கு | கோவிலுக்கு |
| 21 | 26 | his | this |
| 24 | 35 | பிரமுகருக்கும் | பிரமுகரும் |
| 26 | 24 | காரணங்களிலும் | காரணங்களினுலும் |
| 28 | 38 | Vanshais | Vamsha |
| 37 | 15-16 | குருரத்ன மாலையில் | ஸுஷமாவில் |
| 39 | 18 | 10-11 பக்கங்களில் | 5ம் பக்கத்தில் |
| அனுபந்தம் 2 | சுலோகம் 15 | ஏவஸ்ததம் | ஏவஸததம் |

## BOOKS CONSULTED

●


1) காமகோடி பிரதீபங்கள்

2) மாலா பத்திரிகை

3) ஸ்ரீஜகத்குரு திவ்யசரிதம்.

4) காமகோட்டம் — நாயன்மார்கள் — ஆதிசங்கரர். (Cyclostyle copy).

5) Goudapada - By Dr. Mahadevan.

6) Unpublished Upanishad - Adyar Library.

7) சங்கரமடவிமர்சனம் - J.V.R. சர்மா.

8) Satyanveshanam - J.V.R. சர்மா.

9) Truth of Kumbakonam Mutt. - R Krishnaswamy Iyer.

10) Review on Ananthananthagiri Sankara Vijayam.

11) ஸத்யான்வேஷணம் - M.E. சங்கர நாராயண சர்மா.

12) Legal Review - M. Swaminatha Iyer.

13) Devi Kamakshi in Kanchi - K.R.V. Iyer.

14) மடாம்நாய ஸ்தோத்ரங்கள்-

15) A. I. R. 1974

16) அப்பையதீக்ஷிதரின்சரித்ரம் - Sri N. Ramesan.

17) ஸ்ரீ ராமானுஜ சரித்திரம்.

18) வேதாந்த தேசிகரின் சரித்திரம்.

19) வித்யாரண்ய சரித்திரம்.

20) மாதவீய சங்கர விஜயம்.

21) சித்விலாஸீய சங்கர விஜயம்.

22) மூகபஞ்சாசதீ (கிரந்தத்தில்) கும்பகோணம் பதிப்பு.


---

அனுபந்தம் 4-A பொய்யான காஞ்சி காமகோடி பீடத்தின் மடாம்ஞய பிரசாரங்கள் கீழ்காட்டியபடி:

| திசை | மேற்கு | வடக்கு | கிழக்கு | தெற்கு | மத்யாம்ஞயம் |
|---|---|---|---|---|---|
| க்ஷேத்திரம் | துவாரகை | பதரி | பூரி | சிருங்கேரி | காஞ்சி |
| மடம் | துவாரகா | ஜோதிர் | கோவர்த்தன் | ,, | காமகோடி |
| பீடம் | காளிகா | ஜோதிஷ்மதி | விமலா | சாரதா | ,, |
| தீர்த்தம் | கோமதி | அலகநந்தா | மகோததி | துங்கபத்ரா | கம்பாசரஸ் |
| ஈஸ்வரன் | சித்தேஸ்வரன் | நாராயணன் | ஜகந்நாதர் | வராஹர் | ஏகம்பநாதர் |
| சக்தி | பத்ரகாளி | பூர்ணகிரி | விமலா | சாரதா | காமாக்ஷி |
| வேதம் | ஸாமம் | அதர்வணம் | சுக்ல யஜுஸ் | கிருஷ்ண யஜுஸ் | ரிக் |
| மகா வாக்கியம் | தத்வமஸி | அயமாத்மா பிரும்மா | பிரக்ஞானம் பிரும்மா | அகம் பிரம்மாஸ்மி | ஓம் தத்ஸத் |
| ஆசாரியர் | பத்மபாதர் | தோடகர் | ஹஸ்தாமலகர் | பிருத்ரீதவர் | ஆதிசங்கரர் |

இதற்கு மறுப்பாக Dr. வீழிநாதன் மாலா, பத்திரிகையில்' எழுதியிருக்கிறார்.

O. N. O. Press, Madras-16.